உ ஸ்ரீ செகராயஹராமடம

உ
கற்பகப்பிள்ளையார் துணை.

சிதம்பரம்.
சபாநாதர்பேரில்.

# முத்துத்தாண்டவர்

## பாடியருளிய.

கீர்த்தனம் பதம்.

இஃது.

தி - இ - கரபாத்திரசுவாமிகளாதீனத்திற்குரிய.
பிறைசை.

## அருணாசலசுவாமிகள்

மாணாக்கரிலொருவராகிய-
பாரிப்பாக்கம்.

## முனியப்பமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.
பெங்குளூரில்.
சதுர்வேதசித்தாந்தசபையில்காரியத்தலைவராகிய.

## ஆ-ர-சபாபதிமுதலியார்

உத்தரவின்படி.

## கா-அப்பாசாமிமுதலியாராலும்
## ஆ-கந்தசாமிமுதலியாராலும்

பெரியமெட்டிலிருக்கும்
தமிழ்விளக்கவச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை ரூபா - ௩.



உ



தில்லைவிடங்கன்-மாரிமுத்தாப்பிள்ளை ... ................*
சீகாழி-அருணாசலக்கவிராயர்.... ....... ........... ............*
வைத்தீசுவரன்கோயில்-குமாரசாமிக்கவிராயர் ............ ........*
சிதம்பரம்-அமிர்தகவி குப்பையபிள்ளை ........................*

இவர்கள்பாடியகீர்த்தனங்களுக்குள் சிலகீர்த்தனங்களை முத்துத்தாண்டவர்கீர்த்தனமென்று சிலர்நினைத்துக்கொண்டிருக்கும் - ஐயந்தீரும்பொருட்டு அவைகளையுந்திருத்திப்பதிப்பித்திருக்கின்றனை..........*
காஞ்சீபுரம்-சபாபதிமுதலியார் பாடிய-கீர்த்தனம்-நடனவிவரத்தைச்சொல்லுவதால்-அதுவும்பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது..............*



இஃது.

கோமளீசுவரன்கோயில்

# அப்பாவையரால்

அச்சடிக்கப்பட்டது.







சிவமயம்.

# முத்துத்தாண்டவர்சரித்திரம்.

சீர்தருகாவிரிதிகழ்சோழநாட்டில், அடியார்க்கருள்செய்யும்பொருட்டுப்பரமசிவம்திருக்கோயில்கொண்டெழுந்தருளியிராநின்ற ஸ்தலங்களுள் ஒன்றாகித்திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்து ஞானப்பாலுண்டருளியமகாக்ஷேத்திரமாகியசீகாழியிலே வீற்றிருக்கின்ற தோணியப்பாருக்குவாச்சியத்தொண்டுசெய்யும்பேறுபெற்றகுலத்திலே தோன்றித் தாண்டவனென்கிறபெயர்பெற்றுச்சிவநேசத்துடன் வளர்ந்துவருகையில், முன்வினையினால்கர்மவியாதியொன்றுசம்பவிக்க அதனால் தங்கள்குலத்துக்குரியதாகிய தொழில்கற்றுக்கொள்ளுவதற்கில்லாமல்காலந்தோறும்ஆலயத்துக்குப்போய்ப்பிரமபுரீசரையும்திருநிலைநாயகியையும்தோணியப்பரையும்பயபத்தியுடன் தரிசனஞ்செய்து அம்மற்றைக்காலங்களில் அந்தச் சிவாலயத்தொண்டு செய்கின்றவனாய்ச் சிவநேசத்துடன் சிவநாமகீர்த்தனம் பாடிக்கொண்டிருக்கும் ஒரு தாசிவீட்டுக்குப்போய் அந்தத் தோத்திரத்தைக் கேட்டுக்கொண்டிருப்பார் அவள்சுற்றத்தாருக்கும் இவர்சுற்றத்தாருக்கும் அன்னியோன்னியம்இன்மையால் அவள்வீட்டுக்குப் போகிறது சம்மதியில்லாமல் அவரிடத்தில் வெறுப்புற்று ஆதரணைசெய்யாமலிருந்தார்கள், அப்படியிருக்கையில் ஒருநாள் மிகவு மனவருத்த மடைந்து சிவாலயத்திற் போய்ச் சுவாமியையும் அம்மையையும் தரிசித்துத் தோத்திரம்பண்ணிக்கொண்டிருந்து பசியினால் சரீரத்துக் கிளைப்புண்டாகச் சோகத்துடன் வாகனக்கிடங்குக்குள் போய்ப் படுத்துக்கொண்டு சிவத்தியானத்துடனே நித்திரைசெய்துவிட்டார் - அது அந்தக்கோயில்ஸ்தானிகருக்குத்தெரியாமையால்அர்த்தசாமம்ஆனவுடன்கோயில்திருக்காப்பிட்டுக்கொண்டுபோய்விட்டார்கள். அவர்கள்போய்விட்டபின்பு சற்றுநேரத்துக்கெல்லாம்நித்திரைநீங்கியெழுந்துமெய்ப்பிணியினாலும் பசிப்பிணியினாலும்வருந்தித்தோணியப்பரைத் தோத்திரஞ்செய்தார் உயிருக்குயிராயெங்கும்நிறைந்திருக்கும்பரமசிவம்அன்பனது வருத்தத்தைத்திருவுளங்கொண்டு தம்மிடப்பாகத் துமையவளைப்பார்த்தருள அந்தக்குறிப்பையுணர்ந்துகொண்டுசகலவுயிர்களையும்பெற்றவளாகிய உமையவள்கிருபைகூர்ந்துஅந்தக்கோயில்பெரியகுருக்களுடைய புத்திவயதுள்ளகுமாரத்தியைப்போல்வந்துவியசனப்படுகிறவரைப்பார்த்துநீயேன் இப்படிவியசனப்படுகிறாயென்ன,—தாயே நான் பூர்வஜ

ன்னபாவஞ்செய்தேனோ தொலையாதகர்மவியாதிசம்பவிக்க அதனால் வ
ருத்தப்படுகிறதுமன்றிவறுமைநோயென்பதொன்றுநேரிட்டதனாலு
ம்வருந்துகின்றேனென்றுசொன்னார் அதைக்கேட்டுநீவியசனப்படவே
ண்டாம் உனக்குச்சம்பவித்திருக்கிறவியாதியும்வறுமையும்நீங்கிநீ சவு
க்கியமடைவதற்குநான் ஒருஉபாயஞ்சொல்லுகிறேன் ஆனால் இப்போது
உனக்குமிகுந்தபசியுண்டாயிருப்பதுபோல்காணுகின்றது அந்தப்பசி
தீரஅன்னங்கொடுக்கிறேன்சாப்பிடென்றுகோயில் அன்னம் வட்டகை
யுடன்கொடுக்கவாங்கிப்புசித்துப்பசிதீர்ந்தவுடனென்தாயே இந்தவியா
தி நீங்கத்தக்கவகையெதுவோ அதனைச்சொல்லவேண்டுமென்னக், கோ
யில்குருக்கள்குமாரத்திபோல்வந்திருக்கும் பார்வதியார் நீ, சிதம்பரத்
துக்குப்போய்ச்சபாநாதரைப்பாடினால்இந்தவியாதிநீங்கிச் சவுக்கியம
டையலாம்இதுதான் உபாயமென்றுசொல்ல,—எனக்குப் பாடத்தெரி
யாதேநான் என்னென்றுபாடுவேனென்றுசொன்னார் நீ அதைக்குறித்து
யோசிக்கவேண்டியதில்லை சிற்சபைக்கெதிரில்நின்றுதரிசிக்கும்போது
அங்குத்தரிசனத்துக்குவந்திருக்கும்திருக்கூட்டத்தாராலென்னசொ
ல்உண்டாகின்றதோ அந்தச்சொல்லைமுதலாகவைத்துக்கொண்டு பாட
த்தொடங்கினால்சபாநாதர்கிருபையினாலேபாடவாக் குண்டாகுமென்
றுசொல்லிஉமையவள்ஒருசோதியாகமறைந்துவிட்டாள். அப்படிம
றைந்துவிடவேஅச்சமுமிகுந்துயரமுங்கொண்டு எம் அருளானந்தி
னாலே குருக்கள்குமாரத்தியென்றேநினைத்திருந்தேனே லோகமாதா
வாகியபார்வதியாரென்றுதெரிந்துகொள்ளாதபாவியானேனே இவ்வள
வெல்லாம்கட்டளையிட்டருளியஎன்தாய்தன்னுடைய உண்மையையுந்
தெரிவித்துஎனக்குநேரிட்டிருக்கிறவியாதியையும்இப்போதேதீர்த்து
விடலாகாதா சிதம்பரத்துக்குப்போகும்படிகட்டளையிட்டருளவேண்
டுமா - ஆனால்திருவுளப்பாங்கெப்படியோ அதுயாரால் அறியத்தக்கது
ஒருவராலும்அறியத்தக்கதல்லவென்றுஎண்ணிக்கொண்டு அதுமுதல்நி
த்திரைசெய்யாமல்திருநிலைநாயகிசந்நிதிக்கெதிரில்வந்துதோத்திரஞ்செ
ய்துகொண்டிருந்தார். அப்படிஇருக்கையில்உதயகாலமானதால்ஸ்தா
னிகர்முதலானவர்கள்போய்த்திருக்காப்புநீக்கிஉள்ளேசென்று அம்மை
சந்நிதியில்நிற்பவரைநோக்கிச்சமீபத்தில்வந்துநீயிங்கேஎப்படிவந்தா
ய்உன்னைஉன்வீட்டார்தேடுகிறார்களேஎன்றுவினவத் தான்வந்ததும்த
னக்குக்கிடைத்தநன்மையையுஞ்சொல்ல அவர்கள் கேள்விப்பட்டுக்கு
ருக்கள்வீட்டிலிருந்தவட்டகையவரிடத்திலிருப்பதைக்கண்டதுமன்றி
அவர்முகத்தில் ஒரு தேஜசுவிளங்கியிருப்பதையும்பார்த்து ஆச்சரியம
டைந்து அன்றுமுதல்முன்போல்தாண்டவனென்று அழைக்க மனமொ

# முத்துத்தாண்டவர்சரித்திரம்

வ்வாமல்முத்துத்தாண்டவனென்றுஉபசாரமாகஅழைக்கத் தொடங்கி
னார்கள். அப்பால்திருநிலைநாயகிஉத்தாரப்படிபொழுது விடிந்தவுட
னேபுறப்பட்டுச்சிதம்பரத்துக்குப்போனார் அப்படிபோனவர் தில்லை
யெல்லையைக்கண்டமாத்திரத்தில் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து
தோத்திரஞ்செய்துஉள்ளேபோய் வீதிப்பிரதக்ஷணஞ்செய்து தில்லை
மூவாயிரவர்வாசஞ்செய்யும்வீதியையும்வணங்கி ஆலயத்துக்குள் சென்
றுசிவகங்கையில்ஸ்நானஞ்செய்துநித்தியானுஷ்டானவிதிகளைமுடித்
துக்கொண்டுஈரவுடையுடன்சென்றுசந்நிதானத்தில்அஷ்டாங்கபஞ்சா
ங்கத்துடன்பணிந்துஎழுந்துதுதிசெய்துஅன்பின்மிகுதியால் மனமுரு
கிப்புளகமடைந்துஆனந்தக்கண்ணீர்பெருகும்படி பரவசப்பட்டுநிற்
கையில்நடேசமூர்த்தியின் திருவருளால்தரிசனத்துக்குவந்திருப்பவர்க
ளில்ஒருவாக்குண்டாகஅதனைப்பல்லவியாகவைத்துக்கொண்டு ஒருகீர்த்
தனம்பாடித்தோத்திரஞ்செய்தார். அப்படித்தோத்திரஞ்செய்வதை
க்கேட்டருளிச்சபாநாதர் திருவுளத்தில்களிகூர்ந்து அவருக்கிருந்த வி
யாதிஎல்லாம்நீங்கும்படிகடாக்ஷித்து ஐந்துபொன்பணம்பஞ்சாக்ஷரப்
படியின்மேல்வைத்துஎடுத்துக்கொள்ளும்படி கட்டளையிட்டருளினார்
அந்தக்கட்டளையைமறுக்கஅஞ்சிப்பணத்தையெடுத்துக்கொண்டு தம
க்குநேரிட்டிருந்ததீராப்பிணிதிரும்படிஆனந்தநடேசமூர்த்திகடாக்ஷி
த்தருளியதிருவருளின்பெருமையைஎண்ணியெண்ணிக்களிப்படைந்து
பின்பும்பலமுறைஅஷ்டாங்கபஞ்சாங்கத்துடன் பணிந்து தோத்திரஞ்
செய்துபிரியாவிடைபெற்றுக்கொண்டுசீகாழிக்குப்போய் அன்றுமுதல்
தினந்தோறும்சபைக்குவந்துஅம்பலவாணமூர்த்தியைத்தரிசித்துஅவ்
விடத்தில்என்னசொல்தம்முடையசெவிக்குக்கேள்வியாகின்றதோ அ
தையேபல்லவியாகவைத்துக்கொண்டுகீர்த்தனமாவது பதமாவது பா
டிச்சிதம்பரேசுவரர்கட்டளையிட்டருளுகிற பணமும் பெற்றுக்கொள்
ளுகிறவர்ஒருநாள்சிற்சபைக்கெதிரில்வந்துநிற்கும்போது சபாநாதர்க
ட்டளையினால்அங்குத்தரிசிக்கின்றதொண்டர்கள்யாதொன்றும்பேசா
மலிருந்தார்கள் அப்போதுபேசாதேநெஞ்சேஎன்றுஒருகீர்த்தனம்பா
டிக்கட்டளைப்பிரகாரம்பஞ்சாக்ஷரப்படியில்வைத்தபணத்தைப் பெற்
றுக்கொண்டுசீகாழிக்குச்சென்றார். இவ்வாறுநடந்துவருகையில் ஒருநா
ள்பழையபடிசீகாழியிலிருந்துபுறப்பட்டுச் சிதம்பரதரிசனத்துக்குவ
ருகையில்கொள்ளிடமென்னும்நதியில்அதிகப்பிரவாகம்வந்துஒருவரு
ம்போகக்கூடாமையாகவிருக்கவேசபாநாதனைத்தரிசிப்பதற்கில்லையே
யென்னும்ஏக்கங்கொண்டுகொள்ளிடக்கரைமேல்நின்று - காணாமல்வீ

# முத்துத்தாண்டவர்சரித்திரம்.

வீணிலேகாலங்கழித்தேனேயென்றுஒருகீர்த்தனம்பாடினார். அந்தக்கீர்த்தனத்தைக்கேட்டருளிச்சபாநாதர்திருவுளத்தில்கிருபைகூர்ந்துபிரவாகம்விலகக் கட்டளையிட்டருள அந்தநதியைக்கடந்துவருபவர்மனக்களிப்பினால் தரிசனஞ்செய்வேனேஎன்றுஒருகீர்த்தனம்பாடினார் பின்பு சிற்சபையில்வந்துசபேசனைக்கண்டவுடன் கண்டபின் கண்குளிர்ந்தேனென்றுஒருகீர்த்தனம்பாடினார். அதன்பின்பு ஒருநாள்வரும்போது மார்க்கத்தில்தம்மைச்சர்ப்பந்தீண்ட அதற்கு அருமருந்தென்கிற ஒருகீர்த்தனம்பாடினார்பாடியவுடன் விஷமிறங்கிற்று இவ்வாறுசபாநாதர்பேரில்அநேகங் கீர்த்தனங்களும் பதங்களும்பாடித்தோத்திரஞ்செய்துக்கொண்டிருந்துசபாநாதரதுகிருபையினால்அநேகமகத்துவம் விளங்கப்பெற்றுக், கடைசிநாளில் மாணிக்கவாசகர்பேறெனக்குத் தரவல்லாயோ அறியேனென்கிறகீர்த்தனம்பாடும்போது சிற்சபையில் ஒருசோதியுண்டாக அந்தச்சோதியில்விதேகத்துடன்கலந்துவிட்டார்.

சபாநாதர் துணை

———※———

முத்துத்தாண்டவர்சரித்திரம்முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

கற்பகப்பிள்ளையார் துணை.

சபாநாதர்பேரிற்பாடியருளிய

# முத்துத்தாண்டவர்கீர்த்தனம்

கீர்த்தனம் - கல்யாணிராகம் - சம்பைதாளம்.

(பல்லவி.)

பூலோககயிலாசகிரிசிதம்பரம்அல்லால் புவனத்திலேவேறும்உண்டோ.

(அநுபல்லவி.)

சாலோக - - - சாமீப - - - சாரூப - - - சாயுச்சிய
சைவாணரானந்தத்தாண்டவம்புரிதலால்........பூலோக.*

(சரணங்கள்.)

௧. நாலுமகமேருவென்றும் - - நாலுகோபுரநிலையும்.....*
நவரத்நமணிகளால் - ஒளிர்சித்திரமதில்களும்........*
மேலுலகையளவிடுதல் - போலுயர்ந்தெயில்........*
விரித்தகம்பத்திரள்களும்..................................*

காலுலவும்ஆயிரக் - - கால்மணிமண்டபமும்நவ.............*
கங்கையும்நிறைந்தசிவ - கங்கையின்விசாலமும்........*
ஆலிலையின்மாலும் - அயனுமறியாதபேர்...............*
அம்பலமுமேவுவோர்க் - கற்புதம்புரிதலால்.......பூலோக.*

௨. வேதமுதல்வனும்மூல - நாதர்தாபியும்மேரு -..............*
வில்லியார்சிவகாம - வல்லியார்கோயிலும்..............*
மாதவர்விண்ணவர்முனிவர் - போதகர்விச்சாதரர்..........*
மாளிகைகள்குளிகைகளும்.................................*

ஏதமொருசற்றும் - அணுகாதகட்டளைகளும்..................*
இரவிபோலிலங்குகின்ற - இந்திரவிமானங்களும் -..........*
காதலுற்றேறகண்ட - பூதலத்தோரெல்லாம்......................*
காணநூறாயிரங் - கண்வேணுமென்கையால்.......பூலோக*

௩. மேவார்தொழுந்தில்லை - - மூவாயிரம்புனிதர்...............*

வீதியுஞ்சைவர்திரு - வீதியுமடங்களும்.. .. .. .. .. ..*
தாவாதபசிதவிர - - - வாவாவெனுஞ்சத்திர - ......*
சாலையும்பலசோலையும் - ...................................*
பூவாவிகளும்வயலும் - - - ஓவாமலேபெருகு ...............*
பொன்னிநதியுந்தெருவும் - மன்னியவளங்கண்டு........*
தேவாரமூவர்முதல் - யாவாணரனைவருஞ்..............*
சிவதலத்தினிலதிகந் - தில்லைவனமென்கையால்... பூலோக.(க)

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

சேவிக்கவேணும்அய்யா - சிதம்பரம் - சேவிக்கவேணும்அய்யா.

(அனுபல்லவி.)

சேவிக்கவேணும் .... ... சிதம்பரமூர்த்தியாம்
தேவாதிதேவன் - திருச்சந்நிதிகண்டு - சேவிக்கவேணும்*

(சரணங்கள்.)

க. காரானைமாமுகத்தைந்துகரத்தானைக் - கற்பகாரயனை முக்குறுணி யானைச் - சீரார்புலியூர்ப்பதிமேலைவாசல்வாழ் - தேவர்சிறைமீட்டசேவற்கொடியானைச்........ சேவிக்கவேணும்.*

உ. சிங்காரமானசிவகங்கையில்முழ்கிச் - சிவகாமிசந்நிதிமுன்பாகவேவந்து - பங்காகவேபிரதக்ஷணமுஞ்செய்து - பத்தர்கள்சித்தர்கள்பணிவிடையோர்தொழச் ...... ..சேவிக்கவேணும்.*

ங. சிட்டர்பரவுந் திருமூலத்தானனைச் - சிற்றம்பலமென்னும்பேரம்பலத்தானை - அட்டதிக்கும்புகழ்அம்பலவாணனை - ஆண்டவனைத்தில்லைத்தாண்டவராயனைச் - - சேவிக்கவேணும்.*

ச. நல்லதிருவிழா ஆனித்திருத்தேரும் - நாடெங்குமேபுகழ்நற்கோபுரம்நான்கும் - தில்லைமூவாயிரவர் வளர் வீதியும் - திருமஞ்சனம்மார்கழித் தெரிசனமும் - - சேவிக்கவேணும்.(உ)

கீர்த்தனம் - தோடிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

இன்னம்ஒருஸ்தலம் - இன்னம்ஒருகோயில்
இன்னம்ஒருதெய்வம் - இப்படியுண்டோ.*

(அனுபல்லவி.)

பொன்னம்பலத்தில் - - - - - புதுமலராலயன்
போற்றுஞ்சிதம்பரர்.பொற்பதமேயல்லால் - இன்னம்ஒரு.

(சரணங்கள்.)

க. காசி கழுக்குன்றம் காளாஸ்திரி கச்சி - கமலாலயம் திருவண்ணாமலை
யுறை - ராசியமான தெய்வங்கட்கொடுக்கமும் - நடனமும்
இங்கேநளிநமும்இங்கே - -- இன்னம்ஒரு. ✳

உ. பாலானசந்திரசூரியர்மண்டலம் - பாரிந்திரன்பதிபற்றியமண்டலம் -
பூலோகத்திற்குக்கயிலாசம்வைகுண்டம் - பிர்ம்மமண்டலத்துப்
புதுமையும்இங்கே........ ................. இன்னம்ஒரு. ✳

ரு. கரிசற்பிணிகள்பறந்துபோம்சிவ - கங்கையில்மூழ்கிக்கனகசபைவந்
துதெரிசித்தளவினில்தேவனுமாவன் - தெரிசித்தாலாக்கண்டால்
தேவனுமாவான்... ............. ... இன்னம்ஒரு. (ரு)



கீர்த்தனம் - கல்யாணிராகம் - சம்பைதாளம்.

(பல்லவி.)

தீர்த்தமுதல்மூர்த்தியுந்தலவிசேஷமும்எங்கள்சிவசிதம்பரத்தில்தானே

(அனுபல்லவி.)

கீர்த்தனஞ்செய்புமெய்ப் - - - பொருள்மூன்றும்ஒன்றென்று
கேண்மையொடுவேதாகமம் புகரும்ஆகையால் - - - தீர்த்தம். ✳

(சரணங்கள்.)

க. தெரிசித்தபோதந்தப்பிரமனைநந்நாளும் செலுத்துபாக்கியங்களு
ண்டாம் - பரிசித்தபோதுலகு பதினாலும்ரக்ஷிக்கும் பதுமவி
ழியோனாகலாம் - உருசிக்கும்பானீயம் அப்பாசவுட்கொள்ளில்
உருத்திரன்பதவிபெறலாம் - வருசிற்பரானந்தத் தீர்த்தமதி
லாடவே மகேசுரனுமேயாகலாம்.. ... .......... தீர்த்தம். ✳

உ. கல்லுமுதல்மணல்களுந்துகள்களும் லிங்கமெனக்கருதும்வெதங்க
ளெல்லாம் - தில்லைதனிலுண்டான குளம்படியினீரொலாஞ்
சிவ கங்கையென்றுசொல்லலாம் - குல்லைமால்புகழரிய கூட
ங்களானந்தக்கூடமென்றேபகரலாம் - வல்லநடராசர்பதங்கா
ணமேலேதலத்தில்வசித்தவரும் மூத்திபெறலாம்.... தீர்த்தம். ✳

ங. சித்தைமகிழ்சம்பந்தர்தெரிசிக்க யாவருஞ்சிவசுரூபமானதிறமும் -
நந்திமுதலிந்திரர் மூவாயிரம் புனிதருநா ரணருந்தொழுதே
த்தவேவந்துதெரிசித்தவர்க்கு மாறுதபேரின்ப வாழ்வுதருகின்ற
பதமும் - கந்தமுறுகோதைக் சிவகாமிபங்கில்நடனமிடுகடவு
ளருள்வடிவாகையால்..... ... ....தீர்த்தம். ✳.... (ங)

கீர்த்தனம் - நீலாம்புரிராகம் - திரிபுடைதாளம்.

(பல்லவி.)

சிற்சபைதனிலேகண்டுகொண்டேன் - என்றும்.

(அநுபல்லவி.)

அற்புதக்கூத்தனைநாடி - - - அவனியெங்குந்தேடிச்..... சிற்.*

(சரணங்கள்.)

௧. மையந்தருஞ்சிவகாமிமாலே - கொன்றை - மாலையெனவணிந் தானே - மாந்தர்க்குமுன்னேலே - செப்பும்நாள்வாசகனையின்மே லே - கடல் - இனையெனவேவரும்பிறவிதிருமலையாலே. சிற்.*

௨. அடியவர்க்கருள்புரிகுவானைப் - பண்டு - அரிபூசைக்குறைந்துடன் சக்கிரமளித்ததேவனைத் - துடியிடையாள்மலைமகள்பங்கனை - அ ப்பாய்த்-தொழுவார்க்குக்கதிகொடுக்குந்தூயவெளியானைச். சிற்.*

௩ தேவர்வானகோனயன்மாலர்தி - மெய்ம்மை - திகழுமூவாயிரவரி ல்நாமொருவனென்றநீதி - மூவர்பாடற்கருளுநீதி - வந்து - மூ வுலகுந்தொழுதில்லைதனில்நடஞ்செய்சோதி .. ...சிற்.*

௪. முனிவர்புரிதவமகிழ்ந்தேயன்று - இன்ப - முடிவிலாஅருளளித் துமுதலேநாமென்று - தனியேயநீபதியெனவின்று - நின்ற - சாட்சியைக்கண்ணுறுங்கனக சபையருகேநின்று .. சிற் (௫)

---

கீர்த்தனம் - ஆகிரிராகம் - -ஆதிதாளம்.

(பல்லவி.)

நடனங்கண்டபோதேனன்றன் - உடலுஞ்செய்தபாக்கியம் - ஐயா.

(அநுபல்லவி.)

விடமணிந்தகண்டாமன்றுள் - மேவும்அம்பலவாணவுன். - நடனம்.

(சரணங்கள்.)

௧. அரியயனுந்தேடிக்காணு . - - - உருவமாய்நின்றபூரணு மருமலர்ப்பச்சைகொண்டு - உருகுமன்பர்சிந்தையொன்று. நடனம்.

௨. அன்னைதந்தைநீயேயென்று - உன்னையேமிகநம்பினேன் என்னையேநீகாக்கவேணுஞ் - சொர்ணசபைநடராசா. ... நடனம்.

௩. பதஞ்சலிவியாக்கிரபாதர் - இதயப்புகுந்தாண்டவனே நிதம்பிரியாச்சிவகாமி - நேசனேசிதம்பரேசனே.— நடனம். (௪)

---

கீர்த்தனம் - சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

ஈசனே கோடிசூரியப்பிரகாசனே - கனகசபை-

(அநுபல்லவி.)

வாசனேஆனந்தநடராசனே .... .... .. ஈசனே *

(சரணங்கள்.)

௧. அறியேன்மெ நஞ்சில்நேசம் - பிறியேன் வருங்கருமங்
குறியேன் அறிவில்லாத - சிறியேன் எனைநீயாளாய் - ஈசனே *

௨. நினையேன் உனைவேட்டும் - புனையேன் சிவகங்கையில்
நனையேன் கொடியதீ - வினையேன் உய்யவேயாளாய்... ஈசனே *

௩. துதியேன்வணங்காவஞ்ச - மதியேனென்றுஇஞ்சபா
பதியேநம்பினேன்சிவ - கதியேதந்தென்னையாளாய். ஈசனே. (எ)

---

கீர்த்தனம் - சுருட்டிராகம் - சம்பைதாளம்.

(பல்லவி.)

அம்பரசிதம்பரபரம்பரசதானந்த அடிகள்மறவாதருளும் அநுதினமு [மே.

(அநுபல்லவி.)

செம்பொன்மலைச்சிலைவளைத்ததிவ்விய - - - பரமானந்த
சம்போசிவசங்கர ஸ்ரீதாண்டவநடேசா .... ....அம்பர. *

(சரணங்கள்.)

௧. கங்கைமதியரவசையக் - காதிற்குழையசையச் - செங்கைமழுதுடி
யசையச் - செய்யசடையசையப் - பொங்குபுலியதளசையப் -
பொற்பாதச்சிலம்பசைய - மங்கைசிவகாமவல்லிமகிழநடம்
புரியும்.... .... ... .. ... ..............அம்பர. *

௨. நின்மலநிராலம்ப - நிர்க்குணநிரஞ்சன - சின்மயானந்தபர - சிற்
குணசொரூபா - வன்மலக்கோள்நீக்கியருள் - வாரியுறவேயென
து - புன்மையறவுமைகாணப்பொதுவில்நடம்புரியும். அம்பர *

௩, துங்கமறையாகமங்கள் - சொன்னவிதிவழுவாமல் - சிங்காரயாமக
ங்கள் - செய்துதினந்தினமும் - மங்காதநீறுபுனை - வைதிகமூவா
யிரவர் - நங்கோவென்றேபரவநாளும்நடம்புரியும். அம்பர. (அ)

---

கீர்த்தனம் - பந்துவராளிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

நீதயவாயென்னையாளா யிருமாதவர்பாடுங்கய்லாளா.

(அநுபல்லவி,)

தாதகிசூடியதோளா - உமை - காதலாகுஞ்சிதத்தாளா. .- நீதய. *

(சரணங்கள்.)

௧- ஒலிகடல்விடமுண்டநேயா - சீறு - புலியினதளுடையதூயா
மெலியும்அடியவர்சகாயா - பதஞ் - சலிபுலிபணிநடராயா. - நீதய. *

௨. காலனைவதைசெய்தகாலா - புலிப் - பாலனையாண்டகபாலா
வேலனைத்தருமநுகூலா - ஐந்து - கோலனைவென்றதிரிசூலா. நீதய. *

௩. மூவர்பரவியவிநோதா - திரு - நாவலூரான்விடுதூதா
யாவரும்நம்பினையாதா - மகா - தேவகணகசபைநாதா - நீதய. (கூ)

## கீர்த்தனம் - குறிஞ்சிராகம் - ஏகதாளம்.

(பல்லவி)

உனைநம்பினேன்அய்யாசரணம் - நாகம்

(அநுபல்லவி)

புனைசம்போநடராசாபுலியூர்வாழீசா........ உனை.*

(சரணங்கள்)

௧. இருவர்தம்இசைகொண்டகாதா - தித்தி - எனநின்றுநடஞ்செய்யும்இங்கிதப்பொற்பாதா - திருநாவலூரன்விடுதூதா - தில்லைச்சிவகாமியொருபாகாசிதம்பரநாதா.... ........ உனை*

௨. மழுவுமழைகரிக்கின்றகையா - கொன்றை - மலர்மாலைபுனைகின்றவடிசுடர்மெய்யா - எழுபுவிதுதிக்கின்றதுய்யா - அன்பர் - இடமாயிருந்தின்பமுடனருளும்அய்யா... .... .... உனை*

௩. நெடியமாலயன்தேடிக்காணு - தெங்கும் - நிறைந்தவானவும்பெல்லாமணிந்திடும்பூணு - அடியவர்தொழுந்தமிழ்வாணு - தில்லை - அம்பதிநடராசாஅம்பலவாணு.............. .... உனை (ம)

—*—

## கீர்த்தனம் - ஆனந்தபைரவிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

என்னேஎனக்குத்தெரியச்சொல்வாய் - தில்லைப் - பொன்னம்பலத்தரசே.

(அநுபல்லவி.)

தன்னையறியும்அறிவதுநீ - - - - - - - - சற்றும்
தப்பவொண்ணுநிப்போ சாமிசமயம்... .. .. என்னே.*

(சரணங்கள்.)

௧. பூதமுநானல்ல - பொறிபுலன்நானல்ல - ஓதுமறுநி - ஒருநான்கும்நானல்ல - போதக்கருவி - புறம்பல்லஉள்ளல்ல. வாதமுநானல்ல என்றுமயங்கும்..... .......... .... ...என்னே.*

௨ - ஒளியல்லஇருளல்ல - உடலில்நிறைவதல்ல - வெளிறுகறுப்பல்ல - விளக்கொத்ததல்ல - அளியும்அவஸ்தையல்ல - அவஸ்தைபிரிவதல்ல தெளியும்அறிவுமல்ல - தெளியாததல்ல ........... ....என்னே - *

௩ - பாசமுநானல்ல - பதியுநானல்ல - பேசில்அணுவுமல்ல - பெரியவுருவுமல்ல - ஈசரிலங்க - இலங்கும்பொருளல்லகோசரமேயக - தேசமுநானல்ல.... ...... ......என்னே*

௪. சேர்ந்துவருவதல்ல - சேராதிருப்பதல்ல ஓர்ந்துகளிப்பதல்ல - ஓராதிருப்பதல்ல - பேர்ந்துவருவதல்ல - பேராத்தனியுமல்ல - தீர்ந்தஉயிரோது - தில்லைநடேசா ............ ........ .....என்னை (௰௧)

கீர்த்தனம் - பரிசுராகம் - ஆதிதாளம்.

(பல்லவி -)

உன்பாதமே துணைகிருபைசெய்யாய் - அஞ்சல்
என்பாரெனக்குவேறில்லைமெய்யாய் - ... ... ... ...*

(அனுபல்லவி -)

அன்பாகிஅம்பலத்தாடும்அய்யா - அனல்வடி - வெணவொளிர் - பனகசயனன்முத - லினரறு தினம்நிறை - கனகசபேசா .............. உன்*

(சரணங்கள்)

(இரண்டும்)

௧, பலதெய்வமுந்தெய்வமெனக்குறியேன் - நின்னை - அலதென்மனதிலொன்றையுமறியேன் - வலதெள்ளளவுமில்லாச்சிறியேன் - மருவிய - இருவினை - யிருளற - வருளம - ரருமுதல் - கருமகிழ் - திருநடராயா - - - - உன்*

௨, என்னளவினில்சித்தம்இரங்காதோ - வந்தி - சொன்னதென்னதபராமுகமேதோ - உன்னுதலுதவுவதெப்போதோ - உடல்வலை - படவடர் - அடல்வினை - கெடவொரு - மடவர - லொடுமிடும் - நடனவிநோதா ....... .. ...... ...உன்*

௩, இனியொவமெனக்கென்குறைதீராய் - யோக - முனிவோரைவாழ்வித்தஉபகாரா - தனியாம்பெரும்பற்றப்புலியூரா - சயமிகு - புயவலிமுயலக - னெனியம னியபதம் - அருள்தம - னியசபை நாதா. - - - - - உன் - (௰௨)

கீர்த்தனம் - சவுராஷ்டிரராகம் - அடதாளம்

(பல்லவி)

சந்ததம்உன்பாத சேவைதந்தென்மேல் கிருபையாராய்.

(அனுபல்லவி)

செந்திருமேவும்புலியூர்வாழ் - சிற்சபைநடேசசுவாமி - சந்த*

(சரணங்கள்)

௧, பண்சிலம்போசையளிக்கப் - - பாவியேன்வினையொளிக்கக் கண்களானந்தந்துளிக்கக் - கண்டென்மனதுகளிக்கச் ....சந்த*

௨ - சிந்துரப்போர்வையுமாடத் - - தேவர்கள்நான்மறைபாட ஐந்தெழுத்துருவம்நாட - அணிமலர்தூவிக்கொண்டாடச் - சந்த*

௩ - பங்கயத்தயன்மால்காணாப் - - - பாதனேபொற்பணிப்பூணா தங்கவில்வாசுகிநாணா - சம்புவேஅம்பலவாணா......சந்த - (௰௩)

கீர்த்தனம் - காம்போதிராகம் - அடதாளம் -

(பல்லவி -)

சித்திரின்னம்உண்டோ - பூலோகத்தில் - சித்திரின்னம்உண்டோ -

(அனுபல்லவி -)

அத்தர்தில்லைவாழும் - - - - - - அம்பலவாணர்
ஆனந்தத்தாண்டவராயரல்லாமல் - - சித்திரின்னம் - ※

(சரணங்கள் -)

௧ - ஒப்பிடுவித்தைகள்எப்படிஉலகத்தில் - உடலைச்செப்பாகஉயிரேபந்தாகச் - செப்பிடுவித்தைகள்விளையாடியபின்பு - செப்புமில்லைபந்துமில்லையென்றொளிக்கும்.......... ..........சித்திரின்னம் - ※

௨ - இதஞ்சொல்லிக்கின்னரர்கிம்புருடர்பாட - இடந்தனில் அம்பிகைகண்களிகூரப் - பதஞ்சலிவெம்புலியஞ்சலியென்னப் - பதஞ்சலியாமல்பதஞ்சலியென்னும்.... .............. சித்திரின்னம் - ※

௩ - மாலொடுபிரமனுந்தேடரிதான - மலர்ப்பாதங்கண்டுவணங்கித்தெரிசிக்கச் - சாலோக சாமீப சாரூப சாயுச்சியந் - தந்தருள்தாண்டவராயரல்லாமல்.............................சித்திரின்னம் - (௰௪)

---

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஏகதாளம்

(பல்லவி -)

காணாமல்இருந்தால்என்கலக்கந்தெளியாதே -

(அனுபல்லவி -)

பூணாரம்அரவணிந்தபொன்னம்பலத்தானைக் - ... ...காணாமல் - ※

(சரணங்கள் -)

௧ - திரிபுரத்தையெரித்தானைச் - செங்கையில்மான்தரித்தானைக் - கரியுரித்துப்போர்த்தானைக் - கங்கைமுடித்தானை - அரிஅயனுந்துதித்தானை அஞ்செழுத்தாயுதித்தானை - உருவிலியையெரித்தானை - ஒளிவெண்ணீற்றனைக்............................ — ..காண

௨, தலைமாலைதரித்தானைத் - தக்கன்சிரந்துணித்தானை - உலகெலாம்நிறைந்தானை உவமையில்லானை - மலைநாணாய்வளைத்தானை - மறலிவிழஉதைத்தானைக் - கலைமதியைப்புனைந்தானைக் கண்மூன்றுடையானைக்- ..... ... ... ...... ...... காண ※

௩ - நாலுகோபுரத்தழகும் - நன்மதில்மண்டபத்தழகும் - சீலமிருந்தெருவழகும் - சிவகங்கையழகும் - ஆலமிடற்றினிலழகும் - ஆடும்அம்பலத்தழகும் - பாலின்மொழியுமையழகும் பரமானந்தத்தழகும்.............. .............. .... காண (௰௫)

கீர்த்தனம் - ஆகிரிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

கண்டவர்விண்டிலரே - அனுதினம் - விண்டவர்கண்டிலரே.

(அனுபல்லவி.)

கண்டவர்விண்டிலர் - - - விண்டவர்கண்டிலர்
அண்டாண்டங்கடந்தாதிசோதிபாதம் - கண்டவர். *

(சரணங்கள்.)

க. முத்தியத்திசத்தி - மூப்பால்விளைவதல்ல - நெற்றியொற்றுமொரு நிலைமைதானுமல்ல - தத்தெய்யென்றுதாளம் - மத்தளம்அதிர வே - தித்தியென்றுமன்றுள் - ஆடுந்திருக்கூத்தைக் - கண்டவர். *

உ. அந்தக்கரணம் - ஒருநான்குசத்தாதி - ஐந்தும்அடக்கி - அறிவுடன் கூடிச் - சந்தித்துநின்றருள் - சற்குருவும்யோற்றும் - அந்த மதாகியஆனந்தநடனத்தைக் - - கண்டவர். *

ந. ஒவ்வுதானுமல்ல - அவ்வும்இவ்வுமல்ல - நவ்வுஞ்சிவ்வுமல்ல - நாத நடுவணையில் - சிவ்வும்அவ்வுமல்ல - சேர்ந்தவட்டமல்ல - அவ் வும்உவ்வுமல்ல - ஆதிருக்ஷநடனம் கண்டவர் (ம)



கீர்த்தனம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

பாதகெரிசனம்செய்யும்போதே - செய்த
பாவம்வெருண்டுநிசமைமானதே - *

(அனுபல்லவி.)

வேதம்பரவுந்தில்லை மன்றுள்மீதேமெத்த - மிடுக்குள்ள -
காளியும் - திடுக்கிட - உலகமும் - நடுக்கிடத் - திகுர்திமென் -
றடிக்குடன் - நடித்திடும். - பாதகெரிசனம் *

(சரணங்கள்.)

க. பத்தியுடனேபூசைபண்ணும்பாலன் - தன்னைப் - பற்றிப்பிடிக்க வந்தபாசகாலன் - நத்திவிழமேவ உதைத்தருள்காலன் - வெற்றித் தாண்டவம் புரிந்தென்னை - ஆண்டவன் - எனவரு - மாண்ட வர் - எலும்பையும் - பூண்டவன் - சிலம்பணி. பாதகெரிசனம் *

உ. சுந்தரமூர்த்தியார்தமிழுக்காக - உம்பர் - தொழுதிடத் தூதுக்கிசைய ந்தன்பாக - அந்தமின்பரவைக்குமுன்பதாக - வந்த - அரகர சி வகிரி - பரமெரி - படநகை - புரிவார்தர் - பரம - ரகசிய - மான.பாத

ந. ஆலவிடம்அருந்துஞ்சர்மேவசன் - கங்கை - அணிந்தவன் கயிலைமா மலைவாசன் - மாதுகிளையாவுமைமகிழ்நேசன் - சதுர் - மறைவழி

ரி-முடிமிசை யுறைபவன்-அழல்நிகர் - கறைவிட - வரவொடு-
பிறையையும்-அணிபவன். யாதெரிசனம். (௰௭)

கீர்த்தனம்-கல்யாணிராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

ஆடினதெப்படியோ - நடனம் நீ - ஆடினதெப்படியோ

(அனுபல்லவி.

தேடியமெய்ப்பொருளே வளமேவுஞ்
சிதம்பரத்தேஒருசேவடிதூக்கிநின்-றுடி. - ஆ

(சரணங்கள்)

க. ஒன்றல்லரண்டல்ல - ஒன்றுமண்டமல்ல - நன்றல்லதீதல்ல - நாத
விந்துமல்ல - அன்றல்லஇன்றல்ல - ஆதியந்தமல்ல - மன்றுள்
மரகதவல்லிகொண்டாட - - - ஆடின ஆ

உ. ஆணல்லபெண்ணல்ல - அன்றிஅலியுமல்ல - காணருவமல்ல-காரு
தருவமல்ல - சேணல்லமேவுரு - தேவர்க்குள்ளோதேவ - வாகுரு
தல்பச்சைமடந்தைகொண்டாட - - ஆடின ஆ

ங. பூதங்களல்ல - புறம்பல்லவுள்ளல்ல - வேதங்களாலே - விளங்கும்
பொருளல்ல - ஆதவன்போலே - அசையும்வடிவல்ல - மாது
மையாள்பச்சைவல்லிகொண்டாட. - - ஆடின ஆ

ச. பஞ்சவர்ணமல்ல - பஞ்சபூதமுமல்ல - நெஞ்சில்நினைவுமல்ல-நினை
விற்கனவுமல்ல - அஞ்சுமுகமுமல்ல - ஆறுதாரமுமல்ல - வஞ்
சிமரகதவல்லிகொண்டாட. - ஆடின. (௰அ)

கீர்த்தனம்-மோகனராகம்-ஏகதாளம்.

(பல்லவி.)

ஆடிக்கொண்டாரந்தவேடிக்கைகாணக்கண் ஆயிரம்வேண்டாமோ.

(அனுபல்லவி.)

நாடித்துதிப்பவர்பங்கில் - உறைபவர்
நம்பர்திருச்செம்பொன் அம்பலவாணர். ஆடிக் ஆ

(சரணங்கள்.

க. பங்கயபாதச்சிலம்பசைந்தாடப் - பாதச்சதங்கைகள்கிண்கிணென்
றாடப் - பொங்கமுடனேயுரித்துத்தரித்த - புலித்தோலசைந்
தாடச் - செங்கையில்ஏந்தியமான்மழுவாடச் - செம்பொற்கு
ழைகள்முயலகனாடக் - கங்கையிளம்பிறைசெஞ்சடையாடக் -
கனகசபைதனில் - - - - - - ஆடிக் ஆ

உ. ஆரநவமணிமாலைகளாட - ஆடுமரவம் படம் விரித்தாடச் - சீர
ணிகொன்றைமலர்த்தொடையாடத் - சிதம்பரத்தோராடப் -
பேரணிவேதியர் தில்லைமூவாயிரம் - பேர்களும்பூசித்துக்கொ
ண்டுநின்றாடக் - காரணிகாளியெதிர்த்து நின்றாடக் - கனகசபைத
னிலே, - - - - ஆடிக் *

ங. தீர்த்தகணபதிவேலர்நின்றாட - நின்றயன்மாலுடன் இந்திரனாட -
முப்பத்துமுக்கோடிதேவருடனே முனிவரும்நின்றாட - மெய்
ப்பத்திமேவும்பதஞ்சலியாட - வியாக்கிரபாதரும்நந்தியுமாடக்
கொட்புற்றநாதரன் சிவகாமிஅம்மையுங் - கூடவேநின்றாட - ஆடிக்

---

கீர்த்தனம் - சவுராஷ்டிரராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

சம்போசங்கரமஹாதேவா - சதாசிவ - சம்போசங்கரமஹாதேவா.

(அநுபல்லவி.)

செம்பொற்சபையில்நடஞ்செய்யுஞ் சிதம்பரஅரஹரசிவ சம்போ.

(சரணங்கள்.)

க. அரிமால்பிரமர்க்கரியோனே - - சித்தந்தெளிந்த
அன்பர்கள்தமக்குரியோனே - புவனங்களில்
திரியுமுப்புரமெரிசெய்தசச்சிதானந்தபர - சம்போசங்கர *

உ. அனவரததாண்டவராயா - கயிலைவெற்பை
அசைத்தவனேரக்ஷித்தநேயா - மருவார்கொன்றை
புனலொடுமதியும்பைபுனையுஞ்சிற்பரஅரஹரசிவ. சம்போசங்கர

ங. இருமுனிவர்க்கருளும்நாதா - மூவாயிரவர்
என்றும் அர்ச்சனைசெய்பொற்பாதா - - எனையாண்டருள்
திரிபுரைசிவகாமிநிறைமும்மருவிய அரஹரசிவ. சம்போ - (உம்)

---

கீர்த்தனம் - நாதநாமக்கிரியைராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

ஆடியபாதா இருவர் பாடியகாதா.

(அநுபல்லவி.)

நீடியவேதா - தில்லை - நிர்த்தவிநோதா. ஆடியபாதா

(சரணங்கள்.)

க. இருமுனிவரும்ஒரு - நிருபனும் அருகினில்
உருகிஉருகிமனம்அரஹரனனவே - ஆடியபாதா *

உ. அந்தரதுந்துமி - யுந்துடியுந்தவில்
திந்திமிதிமிதிமிதிந்திமியெனவே - ஆடியபாதா *

௩. கும்பமுலையுமையாள் - சம்பிரமத்தொடுகாண
உம்பர்தொழவருசிதம்பரமதனில் ஆடிய (உக)

கீர்த்தனம் - கர்ன்னாடசாரங்கராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

தெரிசித்தளவில்முத்திபெறலாம் - புலியூரானைத்
தெரிசித்தளவில்முத்திபெறலாம் - *

(அநுபல்லவி,)

தெரிசித்தளவில்முத்தி - பெறலாம்புலியூரானைத்
திகம்பரநடம்புரிசிதம்பரதேவனைத், தெரிசித். *

(சரணங்கள்.)

௧. ஆரனைமன்மதனைச்சங் - கரனைமான்மழுவேந்தும் - கரனைச்சடையில்கங்காதரனைப் - பரனைச்சருவதயா - பரனைப்பாதிகம்-பரனைத்தில்லையில்வாழ் சிதம் - பரனைச்சங்கரனைத் - தெரிசித்தளவில் *

௨. மாயனையாண்டவு - பாயனைமலைமகள் - நேயனைஅழிவில்லாக்காயனை - தூயனைவைபோக - நாயனைநால்வேத - வாயனைத்தாண்டவ - நாயனைச்சிவாயனைத் - - தெரிசித்தளவில் *

௩- ஈசனை அம்பர - கேசனை அதிகப்பிர - காசனைக்கயிலாசவாசனைப் - பூசனைசெயுமன்பர் - நேசனைத்திரிபுர - நாசனைச்சிவகாமி - நேசனைச்சபேசனைத் - - தெரிசித்தளவில் - (உஉ.)

கீர்த்தனம் - கேதாரகௌளராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

மாயவித்தைசெய்கிறானே - அம்பலவாணன் - மாயவித்தைசெய்கிறானே

(அநுபல்லவி.)

மாயவித்தைசெய்கிறான் - காயம்ஒன்றெடுத்துக்கொண்டு
நேயமானவெளிதன்னில் - உபாயமாய்க்கூட்டத்திருந்து - மாய *

(சரணங்கள்.)

௧. உண்டுபண்ணிவைக்கிறான் - கொண்டுகொண்டுபோகிறான் - நன்றுக்குந் தீதுக்கும் - நடுவாயிருக்கிறான் - பண்டுநாளும்வெளியெங்கும் - பாரெங்குங்காணவொண்ணான் - அண்டர்தொழ அம்பலத்தில் - நொண்டிகட்டியாடிக்கொண்டு - மாயவித்தை - *

௨. உண்கிறான் உறங்கிறான் - உருவாந்தோராட்டுறான் - சங்கீதத்தை பீட்டுறான் - தானேதீபங்காட்டுறான் - மங்கையுடன்கூட்டுறான் மலைக்கக்கண்காட்டுறான் - அங்கலிங்கபீடமாக - இங்கும்அங்குமாய் அசைந்து மாயவித்தை *

௩. கூட்டுறான்வெகுசண்டை - மூட்டுறான்தத்துவத்தில் - மாட்டுறான் உலகம்யா - ராட்டுறான்பின்னேயும்ஓர் - ஆட்டிடையன் அம்பலத்தில் - அஞ்சாடுமெய்க்கிறவன் - காட்டுமெய்யில் ஆறுக்கட்டால் - வீட்டிலேகுடியிருந்து மாயவித்தை*

௪. மண்ணும்அல்லவிண்ணுமல்ல - வாய்வும்அல்லதேய்வும்அல்ல - பெண்ணும்அல்லஆணும்அல்ல - பேசாமல்நின்றவிடம் - ஒண்ணிவிருந்தருஞ்சையும் - உண்டுபண்ணிக் - கொண்டவன் - கண்மாயக்காரன்என்றுங் - கைக்குள்ளேயுஞ்சிக்காமல் - மாயவித்தை (௨௩)

கீர்த்தனம் - பியாகடைராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

ஆட்டுக்காலைத்தாரும் - என்சாமி - வாதாட்டுக்காலைத்தாரும்,

(அநுபல்லவி.)

ஆட்டுக்காலைத்தேடி - - - - - - அம்பலவாணரே
காட்டுப்புலியும் பாம்புங்காத்துக்கொண்டிருக்குது - ஆட்டுக்*

(சரணங்கள்.)

௧. கின்னரர்கிம்புருடாதியர்வீணையர் - கெருடகாந்தருவர் - சித்தியவித்தியாதரர் - தன்னிகரில்லாததந்திரர்மந்திரர் - சரணைஞ்சரணமென்றிருகைகூட்பிநிற்கப் - பொன்னின்விமானத்தர் சிவிகைவாகனத்தர் - பூதகணஙியர் - போற்றியடிவிரும்ப - அன்னவார்கணத்தவின்னணிமேலற - ஆயன் - ஆட்டுக்காலைத்தேடிக் - கோட்டுப்பன்றியாயினன் - - - ஆட்டுக்காலை - *

௨. முப்பத்துமுக்கோடிதேவகுழாங்களும் - முனிவரானவரும்ரிஷிகளேவோரும் - செப்பமானசந்திராதித்தருங்கூடிச் - செயசெயென்று - பாதந்தனைத்தேடுறார்கள் - ஒப்பில்லாதகாளி அம்பலத்தேநின்று - உன்றன்தாளைக் - கண்டு - தொந்தோமென்றாடுறாள் - மெய்ப்பதாரும் அந்தக்காலையெனக்குத்தந்தால் - வேண்டும் அறுபத்தஞ்சாம் விளையாட்டாகும்சாமி - ஆட்டுக் - *

௩. ஆக்கியதிசைவளர் திக்குப்பாலகரும் - ஆதிவயிரவரும் நாதரானோவரும் - தாக்கியதாவரசங்கமகோடியுஞ் - சந்நிதிதுப்பாதத்தைக் - காத்துக்கொண்டிருக்கவே - பாக்கியஞ்செய்தவன் முயலகன் ஒருகாலைப் - பற்றிமுதுகணையில் - வைத்துச்சுமந்துகொண்டான் - தூக்கியபொற்றாளை யெனக்குத்தந்தால்தலை சுமக்குஞ் சுமக்கும்போதும் போதும்சாமிஇந்த ஆட்டுக் (௨௪)

ஸ்ரீச சபாநாதர்பேரில்பாடியருளிய

கீர்த்தனம் - தோடிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

சாமிதெரிசனங்கண்டு சபலமானேன் நானே

(அநுபல்லவி.)

வாமியொருபாகர்சபைவாணர் ஆதிணாயில்' - சாமிதெரிசனம் - *

(சரணங்கள்)

௧. அநுதினமும் அடியோற்றும் - அடியர்தமை நினையாத - மனிதனையு
மீடேற்றவரமருளவே - தனவெளவேயாத - சாஸ்திரவிதிதவ
றுமல் - தினமுமுமைகாணநடஞ்செய்தருள் சிற்சபையில். சாமி -

௨. சோமனுயர்நதியரவு - தூய - தாகியகொன்றைத்தாமமணியுஞ்செஞ்
சடாபாரனர் - பூமன்முதல் முனிவோர்கள் - நேடமாதவருடன்
சாமளசொரூபர்பணியேமசபைதனிலே - சாமிதெரி - *

௩. தேவாதிதேவரும் - தில்லைமூவாயிரரும் - பாவாணர் மூவர் தமிழ்
பகாடியரும் - நாவாரவேபுகழ்ந்து - பூவாலர்ச்சனைசெய்து - கா
வாவென்றேதுதிக்குங் கனகசபைதனிலே - சாமி (௨௫)

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

அம்பலவாணர் நீரோ - தென்புலியூர் - அம்பலவாணர் நீரோ

(அநுபல்லவி.)

அம்பலவாணர் நீரோ - - அன்பர்க்கன்பானசுவாமி
செம்பொற்கிளிமொழியாள் சிவகாமிநாதர் நீரோ - அம்ப - *

(சரணங்கள்.)

௧. காலனையுதைத்தீரோ - - - - - - காமனையெரித்தீரோ
வேலனையீன்றீரோ வேதவஸ்துவும்நீரோ - அம்பல - *

௨. திரிபுரமெரித்தீரோ - - - - - சிங்கனைத்தரித்தீரோ - *
கரியையுரித்தீரோ காலகாலரும்நீரோ - - - - அம்பல - *

௩. இடைபிங்கலையும்நீரோ - - - - - ஏகபிரமமும்நீரோ - *
விடையின்மேல்வருவீரோ வெட்டவெளியும்நீரோ. அம்பல (௨௬)

கீர்த்தனம் - நாதநாமக்கிரியைராகம் - ஏகதாளம்.

(பல்லவி.)

ஆரார் ஆசைப்படார் நின்பாதத்துக் காரார் ஆசைப்படார் அருள்

(அநுபல்லவி.)

பாராய்பதத்தாராய் துயர்தீராய் புலியூராய் நின்பாதத்துக் காரார் *

(சரணங்கள்.)

௧. கனகமேனியன் - பனகசயனன் கஞ்சனுடன் - பதஞ்சலிபுலிபோ
ற்ற - அனவரதமுங் - கனகசபையுள் - ஆடிச்சிவந்தென்னைத்
தேடியபாதத்துக் - - - - காரார் - *

௨. பாவித்தவெங்கனல் - போலுற்றஅந்தகன் - பாசத்தில்மேவியே-
நசிப்படுதேதுன்னைச் - சேவித்தவேளையி - லேமுத்திபாலிக்குந்
தேவேயெனையாண்ட கோவேநின்பாதத்துக் - காரார்-*
௩. அருவரைதன்னை - இருபதுகையால் - அசைத்துப்பலங் கொண்
டெடுத்தராவணன் - ஒருபதுசிரம் - நெரியவேமுன் - ஒருவிர
லூன்றும் - மருமலர்பாதத்துக் - - காரார்-*
௪. மூவாயிரவரும் - பூவார்மனிதரும் - முப்பத்துமுக்கோடி - தே
வர்முனிவரும் - தேவாதிதேவனே - வாவாவென்றேத்திடும்-
தேசாசிவகாமி - நேசாநின்பாதத்துக் - காரார்(௨௭)

* * *

கீர்த்தனம்-பந்துவராளிராகம்-ஏகதாளம்.

(பல்லவி.)

நானேமுழுதும்நம்பினேன் - கனகசபை - யானேநின்பதந்தானே.

(அநுபல்லவி.)

ஆனைவாகனமாகக் கொண்டோனேபுலியூரானே.
அறியேன்நான்சிறியேன் பிரியாதருள்செய்வாய்-நானே.

(சரணங்கள்.)

௧. விடியாமிடியால்சொடியார்க்கலில்தமிழ்ப் படியாதருள்செய்ய
குடியாயிருக்கும்உன்-அடியாருடனேயென்னைக் கூட்டாய்நா
ட்டாய்காட்டாய்திருநடனம்,...... ... ...நானே.*
௨, கனவிலுநனவிலுமனதிலும்உனைநாடிக்கவிபாடித் துதிசெய்யவும்
தினமும்வரந்தானே - - அருள்உன் பதியையெண்ணித்
திருநாள் வருநாள் ஒருநாள் உனைக்கண்டு .. நானே,*
௩. அந்தரிசிவகாமசுந்தரிமணவாளா - - - வந்தரிதொழுந்தாளா
திந்திரிடிகுடிகு - .. - திந்திமியெனஆடும்
சிவனேசிவனேசிவனேதுணையென்று - நானே.(௨௮)

* * *

கீர்த்தனம்-கௌரிபந்துராகம்-ஏகதாளம்.

(பல்லவி.)

அய்யனேநடனம்ஆடியபொற்பாதாஆனந்தக்கயிலாயனே.

(அநுபல்லவி.)

துய்யனேதிருச்சபை - தனில்தாண்டவம்
தோகுஜெம்தரிதாகுதித்திமிதிகுர்தமென்றொருபாதந்தூக்கிய-அய்*

(சரணங்கள்.)

௧. கங்கைசடைக்கணிந்த- கருணைசாதவளங்கா - அங்கையில்மழுவே
ந்தும்-அரனேபரமலிங்கா செங்கையார்ப்பதுடங்கில் - நாளும்

வளர்பிரசங்கா - ஜெகுஜெம்தரி தோகுதித்திமிதிகுர்தமென்றெ
ருபாதந்தூக்கிய - - அய்யனே

௨. வேழமுகனைப்பெற்ற - விமலாநடமசிவாயா - ஆழிதரித்தவைய-
னை முகுந்தன்நேயா - சோமன்கைவெட்டுண்ட - நாயா அன்
பர்சகாயா - ஜோகுஜெம்தரிதாகுதித்திமிதிகுர்தமென்றெருபா
தந்தூக்கிய - - அய்யனே ✻

௩. சித்தசனுடன்புரம் - எரித்தயாவநாசா - உத்தண்டசர்வேசா
உமைமகிழ்ந்திடுநேசா - சத்திமாகாளிமுன் - தலைநிமிர்ந்திட
வீசித் - தாகுஜெம்தரிதோகுதித்திமி திகுர்தமென்றெருபாத
ந்தூக்கிய - - (௨௧)

——✻——

தாளக்கிர்த்தனம் - தோடிராகம் - சாபுதாளம்.

(பல்லவி,)

ஆடியவேடிக்கைபாரீர் அய்யர் ஆடியவேடிக்கைபாரீர்;

(அநுபல்லவி)

தேடியுமாலயன் - காணாதபாதர் - தில்லைமூவாயிரர் - கண்டவதிநர் -
தாள்தொழுவார்க்கருள் - நல்கும்பிரக்கியாதர் - தப்பரமான - சித
ம்பரநாதர் .............................. ✻

தாகுசேகிணசேகிணங்கிடததிங்கத்தோம் - திரிகிட.............. ✻
ததிங்கத்தோம் - திரிகிட ததிங்கத்தோம் ................ ✻
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட .......... ✻
ததிங்கத்தோம் - திரிகிட ததிங்கத்தோம் கிடத........... ✻
ததிங்கத்தோம் கிடத தத்திமிதித்திமிதெய்தெய் ............ ✻
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமிதெய்தெய் ............. ✻
தாம்தகுந்தரி தரிகு திரிகுகுதரிகுஜெம்தரி................ ✻
தாம்தகுந்தரி தரிகு திரிகுகுதரிகுஜெம்தரி................ ✻
தந்ததிந்தந்தந்தணந்தணந்திமி........................ ✻
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி........................ ✻
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக ..................... ✻
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக ..................... ✻
தத்தடிங்குதடிங்குடிங்குகு. ததணதஜெணுத - ததணதஜெணுத
தத்ததிங்கணத்தோம். ததிங்கணத்தோம்.. ததிங்கணத்தோமென

ஆடியவேடிக்கை.

(சரணங்கள்.)

௧. அதிரும்வாணன்குட - முழவோசைதிசைமூட்ட - அந்தரதுந்துமி
நாதம் - அகிலமெல்லாம்எட்ட - சதுர்முகன் இசைக்கொத்தங் - கரு
வில்தாளம்தட்ட - சதியதிர்தயன்றூடு - தாக்கிமத்தளங்கொட்ட ✻

தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட............ *
ததிங்கத்தோம் - திரிகிட ததிங்கத்தோம்.............................. *
தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட.................. *
ததிங்கத்தோம் - திரிகிட ததிங்கத்தோம் கிடத.......... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய்.................. *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய்.................. *
தாம் - தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி............................ *
தாம் - தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி.......................... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி - தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக - தந்ததிந்திமி தக்கிடததிக்கிடததக
தத்தடிங்கு தடிங்கு டிங்குகு - ததண தஜெணுத - ததண தஜெணுத
தத்ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோமென.
ஆடியமேவடிக்கையாரீர்

உ. விரித்தசெஞ்சடையாட - விளங்குகுண்டலமாட - மென்கைமான்
மழுவாட - மேனியிற்பொடியாடத் - தரித்தவெம்புலியதள் -
மருங்கிலிசைந்தாடத் - தண்டைகிண்கிணியிரு - தாளிலசைந்தாட
தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட.................. *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம்................................ *
தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட................ *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம் கிடத.................. *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய்.................. *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய்.................. *
தாம் - தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி........................ *
தாம் - தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி........................ *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி - தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி
தந்ததிந்திமி தக்கிடததிக்கிடததக - தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக
தத்தடிங்கு தடிங்கு டிங்குகு - ததண தஜெணுத - ததண தஜெணுத.. *
தத்ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோமென.. *
ஆடியமேவடிக்கையாரீர்

ரு. தன்மைசேர் தும்புரு - நாரதரிசைபாட - நாதபிர்மானந்தத் - தழுந்
தியாவருந்தேடத் - தம்மெய்மறந்திரு - மாதவர்கூத்தாடத் -
தையலுமையமகிழ் - கொண்டிருவிழிநாட - *
தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட....... - ........ *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம்................................ *
தாருசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம் - திரிகிட.................. *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம் கிடத.............. *

தரிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய்.......................*
தரிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய் ............... *
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ... ............... ...*
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி.................... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி- தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக - தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக
தத்தடிங்கு தடிங்கு டிங்குகு- ததண தஜெணுத- ததண தஜெணுத. *
தத்ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோம் - ததிங்கணத்தோமென.*
ஆடியவேடிக்கைபாரீர் -(௧௰)

---

தாளக்கீர்த்தனம்-சங்கராபரணராகம் ரூபகதாளம்.

(பல்லவி)

நடிப்பவனே சிற்சபைநின்று நடிப்பவனே.

(அநுபல்லவி.)

நடிப்பவனே கங்கை முடிப்பவனே மறை
படிப்பவனே விடங் குடிப்பவனே. நடிப்பவனே*

(சரணங்கள்.)

க. அரியும்அயனும்விண்அமரர்முனிவரும்அனகதினகரர்பனகசயனமு
ம் - உருகிஉருகியுள்ளொளியும்வெளியேயொளியும்வெளிபெறஅடி
யர்துதிசெய - தரிகுதரிகுகு தரிகுதரிகுகுதாம் தாம்தத்தாம்-
திரிகுதிரிகுகு திரிகுதிரிகுகுதீம் - தீம்தத்தீம் - தரிகுதரிகுகு
தாம் - திரிகுதிரிகுகுதீம -தரிகுதரிகுகு - திரிகுதிரிகுகு - தத்த
தெய்யத் தெய்யத் - திரிகிடதகத ததிங்கணத்தோமென்று. நடி

உ. அண்டரண்டமும்மண்டலர்களும்அஞ்சலிசிரபந்தனத்தொடு-சண்
டெண்டிளம்பிறைநந்து பொங்கக்கணங்கணின்று வணங்கியிடப்புற-
தந்ததந்தக தந்ததந்தக தாம்-தாம்தத்தாம்-திந்ததிந்திகி திந்த
திந்திகிதீம்- தீம்தத்தீம் - தந்த தந்தகதாம் - திந்த திந்திகிதீம்-
தந்த தந்தக - திந்ததிந்திகி -தத்ததெய்யத்தெய்யத் - திரிகிடத
கததிங்கணத்தோமென்று. நடிப்பவனே*

௩. பட்டரானவர் சிட்டரானவர் பத்தரானவர் முத்தரானவர்இட்டமா
ம்புலி - நட்டியாதம் இணங்கி நின்றுவணங்கி பின்புற - தகத
தகதக தகததகதக தாம்-தாம்தத்தாம்- திகித திகிதிகி திகிதிகி
திகி தீம்- தீம்தத்தீம் -தகத தகதக தாம்- திகித திகிதிகிதீம் - தக
த தகதக - திகித திகிதிகி -தத்ததெய்யத் தெய்யத் திரிகிடதகத
ததிங்கணத்தோமென்று .... நடிப்பவனே(௧௧)

மூவடுக்கொலித்தாளக்கீர்த்தனம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

நிருத்தஞ்செய்தாரோ அய்யர் - சதானந்த - நிருத்தஞ்செய்தாரோ அய்யர் -

(அநுபல்லவி,)

திருத்தமானமன்றுள் - சிவசிதம்பரநாதர் - தித்திமி திமிதிமி திக்கிட ததி
க்கிடத திகு - தத்திமி திமிதக தகிங்கணத்தோமென ... நிருத்தம்*

(சரணங்கள்.)

௧. அருமறையொலிகதிக்க - அரகர அரகர அரகர வெனவே - அடி
யர்குழாந்துதிக்கத் - திருநுதல்உமைமதிக்கச் - சிவசிவ சிவசிவ
சிவசிவவெனவே - சேர்திருமுனிகுதிக்க - தரிக்கதோந்தத்திமி
தரிகிட தத்தித் தாந் தாந் தாந் - ததண ததணஜெணு தஜெணுத
தஜெணுத - ததண ததணதக தகிங்கணத்தோமென. நிருத்தம்*

௨. தித்திமத்தளநாதந் - திந்தோம் திந்தோம் திந்தோமெனவே - ஜெக
ஜெங்கெங்கணுமோதப் - பத்தர் அஞ்செழுத்தோதப் - பம்பம்
பம்பம்பம்பம்மெனவே - பகர்திருச்சங்கம்ஊத - தித்தித்தோ
ந்தித்திமி திரிகிட தித்தித் தீந் தீந் தீந் - திரிகுகு திரிகுகு ஜெம்
ஜெம் ஜெம்தரி - தரிகுகு தரிதகத திங்கணத்தோமென. நிரு*

௩. தரணிபவத்தைக் கெலிக்கத் - தகதக தகதக தகதகவெனவே - தரித்
தகைமழுச்சொலிக்க - கருதினர்வண்ணம்பலிக்க - கலகல கல
கல கலகலவெனவே - காலிற்சதங்கையொலிக்க - தரிகுகுந்தரி
தித்தி தரிகிட தித்தித் தோந் தோந் தோந் - தகணக டிங்குகு தடி
ங்கு டிங்குகு - தகணக கண தக தகிங்கணத்தோமென. நிருத் (௩௨)

---

மூவடுக்கொலிக்கீர்த்தனம் - கௌளிபந்துராகம் - திரிபுடைதாளம்.

(பல்லவி.)

ஆனந்தத்தாண்டவம்ஆடினார் - தில்லை - அம்பலவாணனார்.

(அநுபல்லவி.)

ஆனந்தத்தாண்டவம் - ஆடிநின்றார் அரி - அருள்சித்தம் - பெறச்சகத்
கொண் - றருச்சிக்குந் - தனிப்புஷ்பம் - தரிச்சித்தம் - பதத்திற்பொன் -
திருச்சிற்றம்பலத்துள்நின் .... .... ஆனந்தத்*

(சரணங்கள்.)

௧. பாதச்சிலம்பு கலீர் கலீர் கலீரென்னப் - பைம்பொற்குழைகள் -
பளீர் பளீர் பளீரென்ன - வேதப்புராணந் - தத்தெய் தத்தெய்
தத்தெய்யென்ன - விரித்துச்செஞ் - சடைக்குட்பெண் - தரித்
துக்குஞ் - சரத்தைக்கொன் - றுரித்துத்தின் - புரத்தைப்புன் - சிரி
ப்பிற்சங் - கரித்துநின்
ஆனந்தத்*

உ. மால்கைமத்தளந் - தணுதணுதணுவென்ன - மலர்ப்பிரமதாளங் - கணீர் கணீர் கணீரென்னக - ஞ்சகல்விழிமாது - சயா சயா சயாவென்ன - சிறக்கக்கிண் - கிணிச்சத்தம் - தறைக்குட்கிங் - கிணுக்கென்று - பிறக்கச்சொர்க் - கமட்டுக்குந் - திறக்கச் - சபைநிறக்க. ஆனந்த*

ங. பத்தர்கள்தேகம் - விரீர் விரீர் விரீரெனப் - பதஞ்சலிவியாக்கிரர் - செயா செயா செயாவென்ன - சித்தகணங்கள் - சிவா சிவா சிவா வென்ன - திடுக்குச்ஜெம் தணக்குத்திந் - திடுக்குச்ஜெம் தண க்கென்றங் - குடுக்கைக்கும் புயச்சங்கை - அடுக்குத் தொனி யெடுக்க ...... ....... ஆனந்த (ஙா)

---

# இதுகொள்ளடக்கைமேல்நின்றுபாடியது.

கீர்த்தனம் - காம்போதிராகம் - சம்பைதாளம்.

(பல்லவி.)

காணாமல் வீணிலே காலங்கழித்தோமே.

(அநுபல்லவி.)

சேணுயர் போற்றுந்தில்லைச் சிதம்பரஸ்தலத்தைக் காணாமல்.

(சரணங்கள்.)

க. சேரன்சோழன் பாண்டியன் இரணியவன் மன்கோபுரமுஞ் - சூர வீரப்பபூபன் செய்திருமதில்களும் - பாருலகும்போற்றுகின் ற பஞ்சாக்ஷரப்படிகளும் - ஆரணங்கள்சூழ்ந்ததிருவாயிரக்கால் மண்டபமும். ... ... ... காணாமல்*

உ. கங்கையும் நிறைந்தசிவ கங்கையும் படித்துறையும் - மங்கைசிவ காமியம்மை வாசல்மணிமண்டபமுந் - திங்களணிதிருமூல நாத ரருட் சந்நிதியும் - பொங்கு செல்வம் போலுயர்ந்த தங்கப் பேரம்பலமும் ... ... .. காணாமல்*

ங. நிர்த்தசபை கனகசபை சிற்சபையின் தெரிசனமும் - முத்திபெற லாமெனவே முழங்குஞ்சின்னத் தொனியும் - பத்தர்க்குச்சிற ந்த கோவிந்தராசர் சந்நிதியும் - சுற்றிலுந்தூலங்குரத்ன சொர் ணக்கொடிமரங்களும் .... .... காணாமல்*

ச. தில்லைமூவாயிரவர் முனிவர்பெருவீதிகளும் - அல்லும்பகலும் அளிக்கும் அன்னதானச்சிறப்பும் - சொல்லரியமடங்களுஞ்சோ லைகளும்வாவிகளும் - நல்லதிருக்கூட்டங்களும் நாலும்தெருவீதி களும் ... ... .. காணாமல் (ஙச)

கீர்த்தனம் - பைரவிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

தெரிசனஞ்செய்வேனே - முத்திகொடுக்கும் - திருவம்பலவாணனைசனே.

(அநுபல்லவி.)

அரி அயன் இருவரும் அறியாத ... விமலனை
கரியுரிபோர்த்தநங்கருணைக்கடலைத்தேடித். தெரி*

(சரணங்கள்)

௧. செஞ்சடைமதிகங்கையும் - திருமுகமும் - சிறந்தபங்கயச்செங்கை
யும் - பஞ்சாக்ஷரப்படியும் - பாதத்தணிசிலம்பும் - நெஞ்சாரவே
துதித்து - நிர்ப்பரனைக்கண்ணாரத் ... ... தெரி*
௨. காளியுடன்வாதனை - இருமுனிக்குங் - காக்ஷிகொடுத்தநாதனை - மாலு
டன்புலிஇரணிய - வன்மனுக்கருள் - காலகாலனை அன்பர் - கரு
த்திற்குடிகொண்டானைத் ... .. தெரி*
௩. சிவகாமிபிராணேசனை - எனையாண்டருள் - தில்லையம்பதிஈசனை - அவ
னிதொழுந்தயா - பரனையென் ஐயனை - சிவசிதம்பரதேவ - சிற்
றம்பலவாணனைத் .. .. .. தெரி (௩௰)



கீர்த்தனம் - சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

கண்டபின்கண்குளிர்ந்தேன் சனனக் கடலைக்கடந்தேன்*

(அநுபல்லவி.

அண்டர்பிரானைக் - கருணைகடாக்ஷனை - அம்பலத்தைக்கண்ட
வோர்க்கருள்மோக்ஷனை - அண்டபகிரண்ட - மும்படைநய
னை - ஆண்டவனைநித்தியத் - தாண்டவராயனைக். கண்டபின்*

(சரணங்கள்.)

௧. அந்திப்பிறைகங்கை தானசைந்தாடவே - அமரர்முனிவர் சிவசிவவெ
ன்னவே - சந்தித்து அன்புடன் தும்புருநாரதர் - சங்கீதமேபடிக்க -
விந்தைக்கிசைந்த மால்மத்தளங் கொட்டவே - வேதன்கனிவொன்
றுதாளம்முழக்கவே - திந்தோந்தரிகிட தோதிமியென்னவே - சிந்
தித்துநின்றிடும் உம்பர்கள்கோனைக். கண்டபின்*
௨. பரவைதன்வாசலில் தூதனைவேதனைப் - பத்தர்க்குமுத்தி யளித்திடு
ங்கர்த்தனைக் - கரமதில்சூலகபாலந்தரித்தானைக் - கங்காளனைப்புர
னை - நிராமயமாகப் பரந்தருள்நாதனை - நித்தியகல்யாணனைச்
சித்தவிநோதனைப் - பரம்பரமாகியஆண்டவனைக்கிருபை - பாரோ
ர்யாருக்கருள் - பேரம்பலத்தானைக் ... கண்டபின்*

௬. திண்சேல்நல்விழி மாகாளிவாதுக்குத் - தாக்களித்தெக்களிசொல்லி யேயண்டு - கண்படைத்தே எதிர்த்தாடுகின்றாள் தலை - கவிழத்தப் புறம்நிற்கவே - மண்ணிலொருபாதம் விண்ணிலொருபாதம் - மாகலைவைத் தூர்த்தநடனஞ்செய் - அன்னவனைக் கண்ணனை யாரு முக்கண்ணனை - அனங்கனைவென்ற கனகசபேசனைக் கண்டேன் (௬௬)

—— ※ ——

# இது—விஷந் தீண்டியவுடன் பாடியது.

கீர்த்தனம்-மோகனராகம்- ஏகதாளம்.

(பல்லவி.)

அருமருந்தொரு தனிமருந்தம்பலத்தே கண்டேனே.

(அநுபல்லவி.)

திருமருந்துடன்பாகமருந்து தில்லை அம்பலத்தாடுமருந்து
இருவினைகளறுக்குமருந்து ஏழையடியர்க்கிரங்குமருந்து. அருமருந்*

(சரணங்கள்.)

௧. கொன்றைதும்பை யணிந்தமருந்து - கோவைமீறிப் படர்ந்த மருந்து - மன்றுளேநின் றாடுமருந்து - மாணிக்கவாசகர் - கண்டமருந்து. ... .. அருமருந்*

௨. இந்திரானவர் வானவர்தாமும் - இருடிகள் தமக்கெட்டா மருந்து - சந்திரசூரியர் காணுமருந்து - தானே முளைத்துத் தழைத்தமருந்து. ... .... அருமருந்*

௩. திரித்திதித்தியென் றாடுமருந்து - தேவாதிதேவர்கள் காணுமருந்து - கருத்தைத்திருத்தி யிருக்குமருந்து - காலனைக்காலா லுதைத்தமருந்து. ... .... அருமருந் (௬௭)

கீர்த்தனம்- புன்னாகவராளிராகம்- ஆதிதாளம்.

(பல்லவி.)

என்றுசென்றுகாண்பேன் எனதுகண்குளிர.

(அநுபல்லவி)

மன்றுள்பதஞ்சலிபுலியூர்வாழுஞ்சபாபதியை. என்று*

(சரணங்கள்.)

௧. புண்டரீகமுகத்தழகும் .... புன்சிரிப்பினழகும்
வண்டுநிறவிழியழகும் ... வரிசைத்தந்தத்தழகும்
குண்டலமுஞ்சவுக்களியும் .. கொப்புதரித்திடுமழகும்
மண்டலம்எல்லாம்விளங்கும் .. கண்டசரத்தழகும். என்று*

உ. மெய்யெல்லாம் வெண்ணீறு .... விளங்கிய வற்புத வழகும்
கைகளிலே தரித்திருக்கும் ... கனலும் டமருகமும்
பையரவம் பூண்ட கையாற் .. பயந்தீர்க்கு மழகும்
வையமெல்லாம் உய்யவங்கன் .. வரவிளங்கை யழகும். என்று *

ங. குஞ்சிதபாதத் தழகும் .... குனித்தவோர் பதத்தழகும்
கஞ்சன் முடிமாலையொடு ... கவின்பதங்கத் தழகும்
கொஞ்சுமொழி சிவகாமி .. கூட நிற்கு மழகும்
நெஞ்சைவிட்டு நீங்காமல் .. நிசமுமனங் களிக்க என்று (ங அ)

―― * ――

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

காணமுத்தி பெறலாமே - ஒருதரத்தில் - காணமுத்தி பெறலாமே,

(அநுபல்லவி.)

காணமுத்தி தருந்தில்லைத் ... தாணுவாயிருந்து பஞ்ச
பாணனைக் கண்ணுற வெரித்த ... சோணகிரி வல்லவர்பு
ராணசுந்தரர் தமிழ்மூ .. வாணருக்கருள் செயும் நிர்
வாணமொனும் பேரம்பல .. வாணர் குஞ்சித பாதம் - காணமுத்தி *

(சரணங்கள்.)

க. பன்றிவிடமுண்ட நீல கண்டபுர அரசம்பு - முண்டகத்திருமறுளர்
புண்டரீகாசனர் நாதி - கொண்ட சிவசங்கர பிரசண்ட காலனையுதை
த்தருள் - அண்ட மனைபுரிநடேசர் புண்டரீகமலர்த்தாளைக், காண *

உ, பஞ்சவதனமகேசர் குஞ்சரசருமதாரி - வஞ்சிசிவகாமிநேசர் அஞ்
சமெய்ஞ்ஞான நடந்தவர்தம் - நெஞ்சிலுகயம்புரிந்த விஞ்சுகனக
சபேசர் - செஞ்சிலம்பணியொளிர் குஞ்சிதத்தாள் மலரைக், காண

ங, தேடரியநிகழ்பாதம் ஆடரவப்பூணணிந்து வேடனுக்கருளிமூவர்
பாடவேமனமகிழ்ந்து - நீடியசெஞ்சடையில் நாடியகங்கையணி
ந்து - கூடியொளிர் நடராசர் ஆடியமலர்ப்பதத்தைக், காண (ங க)

―― ⁂ ――

கீர்த்தனம் - ஆனந்தபைரவிராகம் ஆதிதாளம்,

(பல்லவி.)

அரகர சிவசிவ நமச்சிவாயா - எங்கள் - அம்மை சிவகாமசவுந்தரிநேயா,

(அநுபல்லவி.)

பாவுந்தொண்டருக்கன்பு செய்யுஞ்சகாயா - நித்திய - பதம்
பெறு - சமயத்தில் நிதம்பரியா - யிருந்தும் - இகம்
பெற - விளையாடுஞ் - சிதம்பர - தேவா - அரகர சிவசிவ *

(சரணங்கள்.)

௧. தினமும்நின்பதசேவைசேவிக்கவேணும் - இந்தத் - தெரிசனமே
மோக்ஷபலமெல்லாங்காணும் - நினைவெல்லாம் ஆநந்தரூபமாய்த்
தோணும் - என்றும் - நித்தம்பல - தேவதைகள் - சுற்றும்பல
விருந்தாலும் - வெற்றம்பல - மல்லாது - சிற்றம்பல - மா
மோ - - - - - அரகரசிவசிவ.

௨. யாவர்க்கும்உயிர்க்குயிராய்உறைந்தாயே - பரம ரகசியமாகஎங்
கும் நிறைந்தாயே - மூவர்க்குமுதல்வனாய்ச்சிறந்தாயே - கரு
ணை - முகதர - செகநக - நகவென - நடமிடு - புகதர -
வரடம - ருககர - தரனே. - அரகர சிவசிவ*

௩. பாதிமதியணிந்த பரஞ்சோதி - அன்பாய்ப் - பணியுந் தொண்
டருக்கெல்லாம் அநுபூதி - ஆதியுமையநிபாகியநீதி - மிகவும் -
அம்பர - மானதி - கம்பர - ரூபப - ரம்பர - மானசி -
தம்பர - தேவா. ...... அரகர சிவசிவ(சய)

---

கீர்த்தனம் - மோகனராகம் - அடதாளசாப்பு,

(பல்லவி.)

யார்க்குத்தெரியும்அய்யா - சபாபதிநீர் - ஆடினவித்தைதான்அய்யா.

(அநுபல்லவி.)

தூக்கியபாதா திரிசூலமுங் கையிலேந்தித் - தும்புரு -
நாரதர் - கிம்புருடர் - கின்னரர் - சூழப்பொதுவில் -
அன்பர் - தாழஆடினவித்தை ..... யார்க்குத்*

(சரணங்கள்.)

௧. பாதச்சிலம்புஅசைய - உமையாள்இடப் - பாகத்திற் - கூடி
யொசிய - வேதகீதங்களும்நின் - றோதவேமழுவேந்தி - வி
டையை - விட்டிறங்கிச் - சடையை - விரித்துக்கொண்டு -
வேளைபார்த்து - ஒரு - தாளைத்தூக்கிக்கொண்ட. தார்க்கு*

௨. குண்டலம் ரண்டுந்துலங்க - திருச்சடையில் - குளிர்கங்கா -
தேவிகுலுங்க - பண்டுசேந்தரர்க்காகப்பரவைக்குத்தூதுசென்று -
பதுமதல்லழகிய - வதன - விழிசுமந்த - பாதம்நோகாம
ல் - சாம - வேதம்பாடிக்கொண்ட ... தார்க்குத்*

௩. திருச்சிற்றம்பலம்வாழ்வோய் - பத்திவலையிற் - செகந்துதித்
திட - வீழ்வோய் - தரித்திந்தித் தோந்திமி - திரித்திந்திந்
தீந்திமி - தகதக - தரிகிட - திகிதிகி - திரிகிட - தாத்திமி
யெனத் - திருக் - கூத்தாடிய - விந்தை. யார்க்குத்(சுக)

கீர்த்தனம்-ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

(பல்லவி.)

சுந்தரகுஞ்சிதபாதநிலைகண்டு தொண்டுசெய்வாய்மனமே.

(அநுபல்லவி.)

சந்ததந்தில்லைச் .... சிவகாமியங்கனார்
தானந்தமாகியஆனந்தநாடகச். - சுந்தர*

(சரணங்கள்)

க. அச்சுதன்பிரமன்றனில் - என்னமாகித்தேடும் - அரக்கன்றலைகள் - நெருங்கிடச்சூடும் - மெச்சியேயார்பாம்பும் - புலியுங்கொண் டாடும் - மேலாஞ்சிதம்பரந் - தன்னில்நின்றாடும். சுந்தர*

உ. வெருஞ்சினத்தேமன் - உயிரைமடிக்கும் - விட்டினபந்தந் - தெ ண்ணைந்தனேமுடிக்கும் - செஞ்சிலம்புங் - கிண்கிணியும்படி க்கும் - சிற்றம்பலத்தில் - எந்நாளும்நடிக்கும். சுந்தர*

ங. நல்லவர்செம்மை - மனத்தவர்போற்றும் - நம்பும்அடியார்-பிற விப்பமாற்றும் - தில்லைமூவாயிரர் - பூசைசெய்தேத்தும் - திருமால்தன்கண்ணிணை - மலரெனச்சாத்தும். சுந்தர(சஉ)

---

கீர்த்தனம் - ஆனந்தபைரவிராகம்-அடதாளம்.

(பல்லவி.

தூக்கியபாதத்தின்நோக்கொளிகண்டு சும்மாஇருநெஞ்சமே.

(அநுபல்லவி.)

தூக்கியபாதத்தைக்கண்டவர்க்கே - சித்தி - சொன்னேன்சொன்னேன் முக்காலுமே - வெற்றி - தேக்குங்கருணைச்சிவகாமியே - சத்தி - தி லலைச்சிதம்பரங்கண்டவர்க்கே. - முத்தி .... தூக்கி*

(சரணங்கள்.)

க. பாக்கியமான - பாபரங்காணும் - பார்ப்பதெல்லாம் - அது வாகவேதோணும் - வாக்குமனதுக் - கெட்டாதநூணும் - மன்றுள்நடனம் - உனக்குள்ளேகாணும். ... தூக்கி*

உ. பிறப்பிறப்பென்னுந் - துயர்போயொளிக்கும் - பேரின்பமா ன - சுகமேயளிக்கும் - மறைப்பும்நினைப்பும் - இலாதேமிளிர் க்கும் - மன்றுடையானருள் - கொண்டுதளிர்க்கும். தூக்கி*

ங. தத்துவமெல்லாந் - தலைதடுமாறும் - தானேநாமான - விடங் கண்டுதேறும் - அத்துவிதப்பொருள் - ஆகியேவீறும் - ஆன ந்தஇன்ப - அமிர்தம்உள்ளூறும். தூக்கி(சா)

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

சிவந்தபாதத்தைக்காணவேணுமென்று......சிந்தையில் நினைமனமே.

(அனுபல்லவி.)

தவந்தனக்குப்பயன் .... தருவோமெனத்தில்லைச்
சபையில்நடனமிடுந் தாண்டவராயன். சிவந்த*

(சரணங்கள்.)

க. அம்பரத்தில்நின்று அமரர்கோன் முனிவர்க்கும் - ஆறுசமயவே
த சாஸ்திரத் தலைவர்க்கும் - உம்பருக்கும்உயர் இருடிகட்கும்
உலகில் - உள்ளபேர்களுக்கும் ஒம்மென்றுமுடிச். சிவந்த*

உ. பதஞ்சலிபகவற்கும் வியாக்கிரபாதற்கும் - பலநாளும்நடஞ்செ
ய்த பாதங்காண்பதற்கு - நிதமும் அவனருளின்றேல் ஆதிக்கு
மன்பர் - நினைவிலுங்கனவிலும் நின்றுநடம்புரிந்து. சிவந்த*

௩. காளியுடனேகூடி வாதாடினவிந்தை - கண்டதில்லைக்காநால் கே
ட்டதுண்டிப்போது - தாளியுடம்பிற்பூசி மானுமழுவுமேந்தி
த்-தொந்தோமென்றொருகாலைத்தூக்கிநின்றுடிச். சிவந்த(சஉ)



கீர்த்தனம் - பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

அவனேதேவர்கள்கண்டன் அவனே தேவர்கள் தலைவனே
அவனைத்தினமுநினை ... .... மனமே*

(அனுபல்லவி.)

தவநேசர்பணிசிதம்பரவாசன் ..... ஒளிருஞ்சிற்
சபைநடராசன்எவனோ அவன்எவனோ அவனே*

(சரணங்கள்.)

க. இகலாதிஎகனனேகனென்றேறதிகழும் ... எழிலானசோதிஎவனோ
புகலாதிபூமிஆன்மாபந்தபாசபரி ... பூரணமானதெவனோ
சகலாதிபெயர்சராசரமாகியேநின்ற ... சம்புநாதன்எவனோ
அகலாதிஅமரருக்காதாரமாந்தெய்வ மாமறைநாதேவன்எவனோ
அவன்எவனோ .. அவனேதேவர்கள்கண்டன்*

உ. உருவாலும்அருவாலும்உருவருவதனாலும் ஒளிரும்பிரம்மம்எவனோ
விரிவாலுமுயர்வாலும்எவ்வுயிர்க்கும்உயிராய்விளங்கியமெய்யன்
எவனோ - ஒருநாலுமறையாலும்உடுக்கலைகளினாலும்ஒதொணா
நாதம்எவனோ - அரியாலும் அயனாலும்அடிமுடியறியாத ஆதி
மூன் ஆதிஎவனோ - அவன்எவனோ, அவனேதேவர்கள்கண்டன்*

௩, பேரானஅரிசிரமேறிப்பிளந்திடும் .. பெரியதாணுமெவனே
நேரானபங்கயன்சிரமதைக்கிள்ளிடும் நிமலன் அமலனெவனே
ஏரானமதனை முன் நுதலின்விழியினால் எரித்தபகவனெவனே
சீரானபுலியூரில் சிவகாமியங்கனும் .... சிற்சபாபதியெவனே
ஆவனெவனே ... அவனேதேவர்கள் கண்டவன் (சுரு)

---

கீர்த்தனம் - புன்னாகவராளிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

மறவாதிருநெஞ்சமே - உனக்கிது - பிறவாமருந்தாமே.

(அநுபல்லவி.)

நறுமாமலர்ப்பொழில் ... .... சூழ்தில்லையம்பல
நாதர்குஞ்சிதச்செம்பொற்பாதம் இமைப்பொழுதும் மறவா*

(சரணங்கள்.)

க, நிச்சயமாகவேகேளாய் அஞ்செழுத்துண்டு - நிற்கும்நிலையையறிந்
துச்சரித்துக்கொண்டு - வைச்சவழியேசென்று அச்சமறவேகண்
டு - மன்றுளானந்தநடம்இன்றேகண்டுகொள்என்றும். மற*

உ, பழைய அடியார்திருவடியில்வீழ்ந்தெழுந்து - பணிசெய்யவெஅவ
ர் - இரங்கிமனமகிழ்ந்து - பிழைவாராமல்காத்துத்திருவடிநீழ
லில் - பிசகாதிருக்கவைப்பார்அசையாய்நீயெப்போதும், மற*

௩, தினவாரமுந்திருமூலத்தானமேசென்று - தெரிசனஞ்செய்சிவகா
மிசந்நிதிகண்டு - அனவரதமுஞ்செம்பொன் அம்பலத்தாடிய -
அம்மையப்பர்பொற்றாள்செம்மையாகக்கண்டு, மற(சா)

---*---

கீர்த்தனம் - முகாரிராகம் - ஆதிதாளம்,

(பல்லவி)

சிவனைமறவாதே நினை மனமே - ஒருக்காலுஞ்
சிவனைமறவாதே நினை மனமே .... *

(அநுபல்லவி)

அவனியுடன்பகிரண்டங்களையும் அளித் .. *
தாண்டவனைத்தாண்டவனை அரசம்பலத்தானைச் சிவனை*

(சரணங்கள்)

க, நடவாதநடக்கைநடந்தாலும் கூடி அடையாதகொடியகலி அரவு
தொடர்ந்தாலும் - படையாளர்சுற்றம்அடர்ந்தாலும் மாதர்
கடைமனைதோறுந்திதங்காத்துக்கிடந்தாலும் சிவனை*

உ, பெண்ணாசைவந்துபிடித்தாலும் நம்மை எண்ணாமலேஒருவர் ஏசிய

டித்தாலும் - புண்ணாகிமனதுதுடித்தாலும் - ஐய்ந்து - கண்ணாகிசெவிமூடிக்கால்கள் துடித்தாலும் .. சிவனை*

ங, வாரியளருயுறைந்திட்டாலும் - பொன்னும்-மேருகிரிவீழுபடவின்னுடைபட்டாலும் - பாருலகவாழ்வுகெட்டாலும் - முந்தயாருமறியாதபழியாம்வினைதொட்டாலும் - சிவனை*

ச, அரிபிரமர்பதங்கள்அழிந்தாலும் - மின்னும் - இருசுடருமாறி-யெதிரோதியிழிந்தாலும்- வருணனும்மண்மாரிபொழிந்தாலும்-நானும் - தருமநெறிபகரும்மறைதவறிமொழிந்தாலும்-சிவனை*

ரு, மருமலர்களணியும் அம்பரனைத் - தேவ - தருவாகிக்கதிஇன்பந்தருங்குருபரனை - உருவாகிவருந்திகம்பரனை - நீலத் - திருவுடனே நடனமிடுஞ்சிதம்பரேஸ்வரனை .... சிவனை (சுஎ)

கீர்த்தனம்-முகாரிராகம் ஆதிதாளம்,

(பல்லவி)

பேசாதே நெஞ்சே பேசாதே,

(அநுபல்லவி)

பேசாதேநெஞ்சேபின்சொல்லிப்பேசியுந்தான்என்னகண்டாய்
ஈசர்புலியூரிலவளர்நேசரனுபூதியல்லால் .. பேசாதே*

(சரணங்கள்)

க, சிங்காரஇடைபிங்கலை - சங்காரவழிபோகாமல் - பொங்கமாகவே நிறுத்தி - எங்கள்குருராயர்பாதம் - ஏத்திக்கோ - மனதைத் - தேற்றிக்கோ - அருளைக் - காத்துக்கோ - அஞ்செழுத்தையும் போற்றிக்கோ - நானென்றசத்தம் ... பேசாதே*

உ, ஆமையாய்ஐந்துறுப்பையும் - ஊமையெழுத்துள்ளிருத்திச் - சோமசேகரன்பதத்தை - நாமெனக்கருத்துள்வைத்து - நாடிக்கோ - பொருளைத் - தேடிக்கோ - முத்திவழியைக் - கூடிக்கோ-ஆனந்தக்கூத்-தாடிக்கோ-நானென்றசத்தம் பேசா*

ங, பட்டிப்பசுக்களைத்துண்டு - கொட்டிலிலடைத்துக்கொண்டு - எட்டெழுத்துருவையுண்டு - பொட்டெனச்செபத்தில்தொண்டு - பூண்டுக்கோ - அருளை - ஈன்றுக்கோ - நமது - ஆண்டவன் - தில்லையம்பலத் - தாண்டவன் - தன்னை நீகண்டால்- பேசாதே(சுஅ)

கீர்த்தனம் - நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்,

(பல்லவி)

சிதம்பரமேநினைமனமே - சென்மம்ஈடேறச்
சிதம்பரமேநினைமனமே .... *

(அநுபல்லவி)

சிதம்பரமேமுத்தி .... .... சின்மயமாகிய
பதஞ்சலிபூசித்த .. பாதனைக்காணச்-சிதம்பரமே

(சரணங்கள்)

க, ஆகமவேத........................புராணவுல்லாச
சிவோகமவேறச....................நடேசனைக்காணச் சிதம்*
உ, தக்கிடதிக்கிட........................தரிகிடஎனவே
திக்குநடனமிடுந்..................தேவனைக்காணச்..சிதம்*
ரு, திந்திமிதிமிதிமி........................திமிதிமியெனவே
விந்தைநடனமிடும்..................வேதனைக்காணச். சிதம்*
ச, சந்தனவேடன........................சம்பிரமலாலித
கந்தவசந்தனை..................யோகனைக்காணச்..சிதம்*
ரு, பத்திஅருட்சிவ........................காமசவுந்தரி
முத்திதரும்பரா..................சத்தியைக்காணச். சிதம்*
சா, தரணியிலனைவருந்........................தமிழொடுதுதிசெயும்
இரணியவன்ம..................விமேருதனைக்காணச்.. சிதம்*
எ, தேவர்தொழுந்திரு........................மாலயன்தேடு
மூவாயிரர்பூசித்த..................மூர்த்தியைக்காணச். சிதம் (சக)

கீர்த்தனம் - மங்களகவுசிகைராகம் - ஆதிதாளம்.

(பல்லவி)

தெரிசனமேநினைமனமே - சபாநாதர் - தெரிசனமே. நினைமனமே*

(அநுபல்லவி)

தெரிசனமேமுத்திபரிசனமே .. நித்திய
வரிசைநடனம்புரி வாஞ்சையைவாணர் - தெரிசனமே*

(சரணங்கள்)

க. கஞ்சமலருதயன் .. .. கஞ்சவனிதைபதி
கஞ்சநயனன்பணி .. கஞ்சமலர்த்தாள் தெரிசனமே*
உ. ஆகமத்துட்பொரு ... ளாகநிறைந்தக
தாகரமகிமைகொ .. ளாகாசலிங்கர் தெரிசனமே*
ரு. கனகாம்பரதர .... ... ... கனகசடாதர
கனகசபாகர .. கனகசபேசர் தெரிசனமே(ருமு)

கீர்த்தனம் - கல்யாணிராகம் - ஏகதாளம்.

(பல்லவி)

தோத்திரஞ்செய்மனமே உனக்கிது மாத்திரமுற்பனமே

(அநுபல்லவி)

காத்தெனைமையாளும்வெண்ணீற்றனை .. வார்சடை
யாற்றனையானந்தக்கூத்தனையனுதினம் - தோத்திரம்

(சரணங்கள்)

௧. ஈசனைக்கனகசபேசனைஞானப்பிர - காசனையோர்சொல்லும்வாச
னைபதஞ்சலி - பூசனைசெயுஞ்சருவேசனைக்கயிலாச - வாசனைத்
திருநடராசனையரனைத் — தோத்திரம்*

௨. பாணனையாண்டருஞ் சூலனைவாசுகி - நாணனை அக்கினி பூணனை
மால்தேடுஞ் - சேணனை நித்தியகல்யாணனை முத்திநிர் - வாணனை
யம்பலவாணனையரனைத் — — தோத்திரம்*

௩. வேளனைமுண்டகத் தாளனைவீறங்கங் - காளனைவிபூதித் தூளனைப்
பாம்பணி - தோளனையடியவர்க்காளனை ஆதிமா - நாளனையுமை
மணவாளனையரனைத் — — தோத்திரம்(௰௧)

---

கீர்த்தனம் - புந்நுவராளிராகம் - ஏகதாளம்.

(பல்லவி)

நிர்த்தமிடுந்திருச்சிற்றம்பலவனை நித்தம்நினைமனமே.

(அநுபல்லவி)

வித்தைவரும்உயர் .... .... புத்திவருஞ்செல்வம்
மெத்தவரும்ஒன்றும் - ஒத்துவரும்மன்றுள். நிர்த்தமிடும்*

(சரணங்கள்)

௧. செந்திருமால் அயன் இந்திரன் மாதவர் - செய்யமுனிவர் - செய
செயவென்றிடத் - தந்திரமாயொருகாலைத் தூக்கிக்காளிமுன்னா
குதோதிமிதிந்திமிதாவென .... நிர்த்தமிடுந்திருச்சிற்றம்பல.*

௨. சகலபுவனத் தவரவர் போற்றிடச் - சந்திராதித்தர்கள் தாமுந்து
தித்திடச் - செகணதோதிமி - திமிதத்திமிதிமி - திருகுதாகு
தாகு - திக்கிடதத்தியென.......நிர்த்தமிடுந்திருச்சிற்றம்பல*

௩. அந்தமுள்ளமாலே சொந்தசவுந்தரி யானசிவகாமி - யம்மைம
கிழ்ந்திடத் - தந்ததனதன - தானதானதன - தக்கு திக்கு
டிகு தளங்குதாவென... ...நிர்த்தமிடுந்திருச்சிற்றம்பல (௰௨)

---

கீர்த்தனம் - நாகவராளிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி)

தேடித்திரியாதே நெஞ்சே தேடித்திரியாதே.

(அநுபல்லவி)

தேடித்திரிந்து .... .... திகையாதேநெஞ்சே
சிற்றின்பத்தாலே.......செகமெல்லாம்பஞ்சே. தேடி*

(சரணங்கள்)

௧. நானென்றவாணவந் - தன்னையேநீக்கு - நாதாந்தப்பேரொளி -
தன்னிலேதாக்கு - மோனமாமந்திரத் - துண்மையைநோக்கு
முத்திக்குவித்தாய - முழுமதியாக்குத் ... ... தேடி.*
௨. ஆத்துமஞானிக்கு - மெய்தனிற்சொட்டு - அண்டரண்டபகி -
ரண்டங்கள்விட்டுப் - போனவானந்த - வெள்ளத்தைவெட்டு
ப் - பேச்சுரையற்ற - இடந்தனைக்கிட்டுத் .... தேடி*
௩. போட்டவிடத்திற் - பொருள்தனைத்தேடு - போதநிஷ்டையு
ட் - புகுந்துநீயாடு - நாட்டமுடன்சற் - குருபாதந்தேடு -
நாலாம்பதத்தில் - அருள்ஞானவீடு .... ... தேடி. (௫௧)

---

கீர்த்தனம் - நாதநாமக்கிரியைராகம் - ஏகதாளம்

(பல்லவி)

கண்டாயோமனமே - நடேசனைக் - கண்டாயோமனமே.

(அநுபல்லவி)

அண்டமுழுதும் பிரம்மமென்று - தோன்றலிலே
கொண்டவம்பலவாய்வந்த - புண்டரீகபுரத்தைக் கண்டா*

(சரணங்கள்)

௧. தொந்திப்புநீங்கினையே - மெய்ஞ்ஞானத்தின் - சந்திப்புவாங்
கினையே - செந்துப்பிரளயகன்மம் - என்றுபகலிரவாய் - அந்
தக்கரணமே - ஆனந்தக்கடலிருக்கக் .... கண்டா*
௨. சத்துவக்குணம்புகுந்தாய் - ரசோகுணம் - அற்றகுணமிருந்தாய் -
செத்தகயிறுதனிற் - புற்றுப்பாம்புப்பிரமை - உற்றுத்தெளிந்
துமகிழ் - பெற்றவர்பேரின்பங் ... கண்டா*
௩. இன்பந்தெளிந்துகண்டாய் - அசேதன - வெம்பசிதீர்ந்துகொண்
டாய் - அன்புக்கினியதோர் - சிதம்பரந்தனிலே - நடம்புரிந்
தருள்தரும் - அம்பலவாணனைக் - கண்டா*(௫௨)

---

கீர்த்தனம் - சாவேரிராகம் - சாபுதாளம்.

(பல்லவி)

சிவசிதம்பரமே தெரிசிக்கமனமே செனனமில்லைஇது நிசமே.

(அநுபல்லவி)

தவசிகட்குநடஞ்செய் - சம்போசங்கரசிவ
பவநாசபுனித - பஞ்சாக்ஷரரூபரியாழ். சிவசிதம்*

(சரணங்கள்)

௧. பரவும்பதஞ்சலி - வியாக்கிரபாதரோடும் - பார்த்தவர்க்கெல்லாம்

பிர்ம்மானந்தமேமூடும்க் அரியும்அயனும் - மயங்கியேதேடும்-
ஆதியந்தமில்லா - அமலன் நின்றாடும் ... சிவசி*

௨. மங்களவேள்வியும் - மாதவர்பூசையும் - மருவியஆகம - வேதத்தி
னோசையும் - துங்கமத்தளதாள - சங்கீதவோசையும் - துலங்கு
ம்மெய்யடியார் - துதியோசையும்வளர் ... சிவசி*

௩. வல்லவர்வாசகஞ்செய் - தில்லையுள்தொண்டு - மகிழ்ந்துசெய்வார்ப
தஞ் - சென்னிமேற்கொண்டு - அல்லும்பகலும் - பேரின்பத்
தையுண்டு - ஆனந்தநிர்த்த - நடேசனைக்கண்டு சிவசி (௩௩)

—*—

கீர்த்தனம் - முகாரிராகம் - சாபுதாளம்.

(பல்லவி)

கெட்டுப்போகாதேநெஞ்சே - அனியாயமாய்க்
கெட்டுப்போகாதே .... நெஞ்சே

(அநுபல்லவி)

சிட்டர்தொழுந்தில்லைச் .... சிதம்பரந்தனில்வாழும்
சிவனேசிவனேசிவனேயென்றுருகுநீ ... கெட்டு*

(சரணங்கள்)

௧. ஆசாபாசத்தைத் துரத்து - உனக் கதுவுண்டோசொல்வரத்து -
பேசாவனுபூதி - பிறவிக்கழிவுதேடும் - பெருமான் பெருமான்
பெருமானென்றுருகுநீ .. .. கெட்டு*

௨. விழலுக்குழுத்துலை போட்டு - சும்மா - வீணுக்கிறைத்தெந்டபலன்
காட்டு - பழகப்பழக அந்தப் - பழம்உனக்குருசிக்கும் - பரனே
பரனே பரனே - யென்றுருகுநீ கெட்டு*

௩. சஞ்சலம் ஏதுனக்கடங்கு - குரு - சாமிபாதம்பணியத்தொடங்கு
வஞ்சகமேவேண்டாம் - மன்னன்பொன்னம்பல - வாதாவாதா
வாதா - வென்றுருகுநீ கெட்டு (௩௪)

—*—

கீர்த்தனம் - காம்போதிராகம் - சம்பைதாளம்.

(பல்லவி.)

இனிச்சுமக்கமுடியாதுதேகம் - தில்லை.

(அநுபல்லவி.)

வனத்துறையுஞ்சிவகாமவல்லியுமைபாகா .. இனிச்*

(சரணங்கள்.)

௧. மலத்திரள்விளைந்தபுழுக்கூடு - துன்ப - வாரியைப்புலவேடர் வா
ழும்பெருங்காடு - சலத்துளியாலேவிந்தவீடு - இருமை - தனை
த்தலெனுஞ்சனனந்தனையெடுத்துப்போடு. இனிச்.*

௨. ஒருநாளும்பேர்சுமக்குமூட்டை — நான் - ஒருவனேசுமப்பன் இந் தவுடல்மாயக்கூட்டை - மருவில்லாப்பழங்காயக்கோட்டை - கண்ணே - வாசலொன்பதாகியேவரும்பழையவீட்டை. இனிச் ✱

௩. வருவாதஆரணையுங்காத்தீர் - இரண்ணிய - வன்மனுக்குத்தனதாக ம்வரமேவைதீர்பார்த்தீர் - திருநாளைப்போவானையுஞ்சேர்த்தீர் - நாளுந் - சிற்சபையில்ஆனந்தத்தெரிசனந்தந்தேற்றீர்.. இனிச் ✱

௪. வருவதென்றாமலர்க்கொன்றைதாரும் - வந்து - வாழாதுவாழும் இந்தமலமயக்கந்தீரும் - திருவருளால்நோக்கினன்னைப்பாரும் - பார்த்துச் - சித்தமகிழ்ந்தானந்தத்தெள்மதுமைசேரும் - இனிச்.

---

கீர்த்தனம் - நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

(பல்லவி)

இன்னம்பிறவாமலேயாளாய்....கேளாய்

(அநுபல்லவி)

பொன்னம்பலவாணா வாகா பூமதனைவென்றயோகா நிரந்தரமும்
எம்சபையில்வைபோகா புலியூர்ச்சிவ காமவல்லி யுமைபாகா ✱
இன்னம்பிற... .. .... .... .... .. ✱

(சரணங்கள்)

௧. காயமேநிலையென் - றெண்ணி — நீயபாவமே - பண்ணி - மாயநரகை நண்ணி - வருந்தவேமுடியாது - பாவஞ்செய்யாமல் - இருந்தகல வுமொண்ணாது - தவஞ்செய்தாலும் இருந்தசனனமும்போதும்

௨. தொலையாச்சனனத் தாலே - அலைவாய்த்துரும்பு போலே நிலையாச்சுழலின் மேலே நின்மனதருளைநாட்டி - அகலாத - கன்மவினைகளைவிட்டோட்டி - அழிவில்லாதசின்மயவீடுகாட்டி - இ ✱

௩. நின்னருளினுமேல வந்தேன் சந்நிதியனையடைந்தேன் முன்னம் வினையைத் துறந்தேன் மூண்டகடுவுண்டதூயா — வணங்கி னுறை - ஆண்டருளுய்வகுநேயா - கனகசபைத் - தாண்டவந டராயா..... ..... ... இன்னம்பிற. (௫அ)

---

கீர்த்தனம்-ஆகிரிராகம்-ஆதிதாளம்

(பல்லவி)

கலந்துகொள்வேனே இனிநான் கலந்துகொள்வேனே.

(அநுபல்லவி)

கலந்துகொள்வேன்றில்லை ... .... ...அம்பலந்தனிலே
காரணங்கடந்த...பூரணத்துடனே..... கலந்துகொள்வேனே ✱

(சரணங்கள்)

௧-கூற்றுவனுகத்தொடரும்இருமைக் - கொடியவினைகள்அடியோடக
ன்றது - சாற்றும்பெரியபுவனமெல்லாங்கொண்டு - தானனுவான
துநானனுவாகக்.... .... .... கலந்துகொள்வேனே*

௨. கட்டுரைகேளாதவன்மனம்யான்வைத்த - காவலிற்றங்கியென் ஏவ
லாளாயது - தொட்டுமறுத்திங் கெனைத்தடுப்பாரெவர் - சொல்லற்
கரியதோர் நல்லவுறவினிற் ... ... கலந்துகொள்வேனே*

௩ - செங்கோற்கடவுட்பதமும்மயானமும் - செய்யகமலத்தோன்
கையுஞ்சலித்தது - நங்குருநாதன்குறியுட்நிலைத்தது - நம்பலமான
பேரம்பலச்சோதியிற்... .. கலந்துகொள்வேனே. (௫௧)

---

கீர்த்தனம்-ஆரபிராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

மாணிக்கவாசகர்பேறெனக்குத்தரவல்லாயோஅறியேன்.

(அனுபல்லவி)

காணிக்கையாகக்கொடுத்தேன்.. ...உனக்கென்னை
ஆணிப்பொன்னேதில்லை அம்பலவாணா. ...மாணி

(சரணங்கள்)

௧, நோயும்வறுமையும் - சண்டையிடாதே -நோக்கலாநோக்காக -
நோக்கிவிடாதே - தாயுந்தமருஞ் - சலித்துவிடாதே - சந்ததி
யில்லையாதே - ஆயும்இளம்பிறை - சூடியமூர்த்தி - அத்துவித
முத்தி - புத்தியளித்துத் - தியமறுமை - எதிர்நின்றுதவுஞ் -
சிற்சபைமந்திர - ...... சிதம்பரதேவா......மாணிக்கவாசகர்*

௨. கட்டிலைவிட்டுக் - கிடத்துமென்றுதே - காலைக்கரங்களைக் - கட்
டுமென்றுதே - கொட்டிமுழக்கிட்டுக்கூகூவென்றுதே - கோர
ணிகொள்ளாதே - எட்டிஒருவர் - புலம்பிவராதே - ஏழைப்
பிணத்தை - எடுமென்றிடாதே - சிட்டர்தொழுந்திருக் - கட்ட
ளைமேவுஞ் - சிதம்பரதேவா - திருநடராயா-மாணிக்கவாசகர்*

௩. கட்டையின்மேல்வைத்துச் - சுட்டுவிடாதே - கள்ளக்குழியில் -
புதைத்துவிடாதே - பட்டும்பணியும் - தரித்தபேலோர்வந்து -
பாலள்ளிக்குத்தாதே - கிட்டிஒருவர் - சடங்குசெய்யாதே - கே
ட்டவெல்லாங் - கிடைக்கத்தகுமென்ன - சிட்டிப்பவன்பணி-
சிற்சபைமேவுஞ்-சின்மயரூப - சிதம்பரநாதா-மாணிக்கவாசகர்

௪. அப்பரும்லிங்கத் - தடைந்தனரொன்றும் - ஆரூரர்வெண்கரி - ஏறி
னரொன்றுஞ் - செப்பரியதிருஞானசம்பந்தர் - தேகுடன்சென்
றொன்றும் - இப்படிஎன்னை - அலைத்துவிடாதே - எம்மானி
ருந்த - படியேஇருந்திடச் - செப்பவருவீர் - நடம்புரிமே
வுஞ் - சிதம்பரதேவா - சிவகாமிநேயா ... ... மாணிக்கவாசகர்

௫- சிற்பரதற்பர - மெய்ப்பொருளுங்கண்ட - சித்தரொல்லாரும் - நி
றைந்துதெரிசிக்கத் - தற்பதமாம்நாலாஞ் - சத்திநிபாதமுஞ்
சாயுச்சியமும்பெறவே - பொற்பூமாரிஇமையோர் - சொரிந்தி
டப் - பொன்னூசலாடுந் - திருவாதிரைநாளில் - கர்ப்பூரதீபம்
போல் - என்றனுடலைக் - கனகசபையிற் கலந்துகொள்வாயே.
மாணிக்கவாசகர். (௬௰)



ஆக - முதற்புத்தகப்பதிப்புக்கீர்த்தனம் - ௬௰-ம்




சபாநாதர்துணை.



உ

திருச்சிற்றம்பலம்.

சபாநாதர் துணை.

# முத்துத்தாண்டவர் பதம்.

பதம்-கல்யாணிராகம்-ஆதிதாளம்.

(பல்லவி)

வருவார் வருவார் என்றென் மனதைத்தேற்றுவாரில்லை
வந்தாரென்பாரைக் .... காணகிலேன்

(அநுபல்லவி)

தெருவுக்கும்வாசற்குந் .... திரிவார்சகிமாரெல்லாந்
தில்லாபுரீசர்முன்போய் நில்லாரென்காதல் சொல்லார். வருவார்*

(சரணங்கள்)

௧. நிலவினுலாவச்சொல்வார் - சலவைப்பன்னீரிறைப்பார் - கலவிக்
குவேளையென்பார் - மலர்மெத்தைஇதுவென்பார் - சலமோ
இதுசிநேகப் - பலமே நானேது செய்ய - உலகாளுந்தில்லை
யீசர் - உலவியென்னையணைய. .... வருவார்*

௨. நாமறியோமோசாமி - தாமதஞ்செய்வாரோ-நீமயங்காதேயென்று
பூமேலேற்றவறிவார் - காமனார் வந்தாலென்ன- சோமனார் வந்தா
லென்ன -பூமலர்வாடுமுன்னே-ஏமசபேசரென்முன் - வருவார்*

௩. கங்கைசடையிலாடச்-செங்கையில்துடியாடப்- பங்கயமெனுங்கை
கொள் - மங்கையர்கள்கொண்டாட- நங்கைசிவகாமி - கொங்கை
சேர்புயமாட-செங்கைவீசியாடச்- சதங்கைபாதத்திலாட-வ-(க)

---

பதம்-நாதநாமக்கிரியைராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

தேனார்மொழிமானாள் - தன்னைச்சேரீர்மயல்தீரீர்

(அநுபல்லவி)

மானார்கரனேஅம்பலவாணாபணிபூணா. - தேனார்மொழி*

(சரணங்கள்)

௧. அளகமதுசரியமுகம் - அலரவனைநெரிய- களபமுலைபுளகமெழ-
கலவிசெய்யத்தருணம் - வளமைபெறுஅக்குமாலிகை - மார்
பாஅதிரூபா-களமார்விடனுறுதில்லைக்-கனகசபைவாணா. தேனார்.

உ. அன்னைதான்வசைபேசவே துணை - யானமாதருமேசவே - கன்னல்மாமதனெய்யவே மலர்க் - கையிற்கங்கணந்தொய்யவே - என்னதான்செய்வாள்சொல்லீர் மயல் - எளிதல்லவேநில்லீர் - மன்னுசுந்தரர்தூதா தில்லை மன்றாடியபாதா. தேனூர்*

௩. சந்தனஞ்சுடுதென்பள் மனந் - தகைத்தால்புகையென்பள் - அந்தியுந்தணலென்பள் ஒரு - அல்லுநூறுகமென்பள் - கொந்தார்கொன்றைத்தாமா நறுங் - கோதையம்பிகைவாமா - இந்திரன்திருமாலயன்றொழும் - ஈசா நடராசா. தேனூர்(உ)

---

பதம்-ஆஹிரடகன்னடராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

பேசவும்ஒண்ணாதகோபம் ஏதோ தென்புலியூர்

(அநுபல்லவி)

ஈசரே உமக்குநானாகாதோ.

(சரணங்கள்)

௧. வருத்திநான்அழைக்கவும்ஆச்சோ - உம்முடன் - பொருந்தாத என்னைச்சேர்ந்தால் ஏச்சோ - இருந்தவிடமெல்லாம் அவள்பேச்சோ - அவள்கையின் - மருந்துதான்தலைக்கேறிப்போச்சோ. பே

உ. மாதர்வசையாலேமனம்நோமோ - என்னைத்தள்ள - நீதமோபெண்பழிவினைபோமோ - காதல்அறியாதவர்நீர்தாமோ - சுந்தரனார் - தூதரோஇப்படிசெய்யலாமோ. ... பேசவும்*

௩. கொந்தலர்அமளியிற்சேர்ந்தீரோ - சேர்ந்தணைந்து - சந்ததம் நீங்காமயல்தந்தீரோ - அந்தமின்னார்தம்மைநினைந்தீரோ - சிவகாம - சுந்தரிபாகரோமறந்தீரோ, .... பேசவும்(௩)

---

பதம்-கல்யாணிராகம்-அடதாளசாப்பு.

(பல்லவி)

அப்படி இப்படி செய்ததற்கொப்பினேனே
தப்பிதமோ தில்லைத்தாண்டவராயா. *

(அநுபல்லவி)

பொற்படியே கொடுத்தெப்படியாகிலும்
மெய்ப்புடன்வந்தென்னைஒப்புடன்கூடநீர். அப்படி*

(சரணங்கள்)

௧. வாலையிலே தந்தச்சேலையிலே முத்து - மாலையிலே பொன் ஓலையிலே செய்த - வேலையிலே அந்தி மாலையிலே தென்னஞ்-சோலையிலே காமலீலையிலே நீர். ... அப்படி*

௨.மேடையிலே மலர் சூடையிலே விளை - யாடையிலே உ வாடையிலே நீர் - ஆடையிலெயென்னைக் - கூடையிலே த் - தாடையிலே கை போடையிலே நீர். ... ப்படி*

௩.நாளையிலே என்னை ஆளையிலே சொந்தக் - காளையிலே யே வாளையிலே இந்த - வேளையிலேநல்ல நாளையிலே ப்பக் கோளையிலேஆசை மீளையிலே நீர். ... அ படி(ச)

—————*—————

பதம்-கல்யாணிராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

சரசம்இப்படிசெய்யலாமோசாமிநீர்சரசம்இப்படிசெய்யலா மாசாமி

(அநுபல்லவி)

வரிசைபெறும்விநோதரோ வளர்சிதம்பரநாதரோ. ச ம்

(சரணங்கள்)

௧. முலையிலேகையைப்போடுநீர் - முகத்திலேமுத்தம்நாடு ர் - தலையிலேமலர்சூடுநீர் - தழுவியேவிளையாடுநீர். ... சரசம்.

௨.மானமுறும்எங்கள்குலத்திலே - மாதர்வரும்இன்பநல திலே. ஞானமுறுஞ்சிவதலத்திலே-நாகரீகபொன்னம்பலத்தி ல.சரசம்

௩.வேதத்துதித்திடும்நீதரோ - மிகுந்திடும்பிரக்கியாதரோ - ஓதவருந்தில்லைவாதரோ - உயர்சிதம்பரநாதரோ. ... ரசம்(ஞ)

—————

பதம்-சாவேரிராகம்-திரிபுடைதாளம்.

(பல்லவி)

வேண்டாம்இதெல்லாங்காரியமல்ல ... தீண்டாதேநில் ம்

(அநுபல்லவி)

வேண்டாம்இதெல்லாங்காரியமல்ல தீண்டாதேநில்லும்தாய் மர்கண்டால்,ஆண்டவரொன்றும்பயப்படார்தில்லைத்தாண்டவராயரோ வேண்*

(சரணங்கள்)

௧. ராவிலேவந்துஎன்னைமல்லிகைப் பூவிணைலேயெறிந்துசரு த் - தாவிமடியைப்பிடித்துப்பண்ணுத சரசமேபண்ணுநீர் கோவில்லாதஊரோ அய்யோ - பாவியேன்பக்ஷம் யார் ரால்வார்கள் - சேவிலேறும்நீதரோதிருத் தில்லைநாதரோ... வே டாம்*

௨.ஆரும்இல்லாதஇடத்தில்பிடித்தால் சேருவாளென்றுபார் ந்தீர்-அந்தத் - தாருகாவனத்துமாதர்போலல்லசமர்த்திநான் அய்யா- ஊரும்உலகும்அறியச்சேலைதாரும்இரவும்பகலும் வீட் டில்-வாருங்கூடியணையலாஞ்செம்பொன்மன்றுளீசரோ. வேல் டாம்*

௩. இன்னார்இனியாரென்றெண்ணாமல் முன்னூறவாயிருந்தவரைப் போல்-பின்னாலேவந்துதழுவினால்கண்டபேரென்னசொல்லுவார்-சொன்னாலுஞ்சற்றும்அறிகிறீரில்லை - முன்னாலறிந்தவர்வருகிறார் பாரும்- பொன்னாடர்பணிகையிலை வாசரோபுலியூரீசரோ.(௬)

---

பதம்-நீலாம்புரிராகம்-சம்பைதாளம்.

(பல்லவி)

அழைத்துவாபோடிஅடிமானே......இன்பம்

(அனுபல்லவி)

தழைத்தபுலியூரில்தாண்டவனைத்தானே...அழைத்து*

(சரணங்கள்)

௧. அன்னநடையின்னேயெனிவ்வன்மம் என்னை - அன்னையென்றும் பார்உன்றன்தன்மம் - சொன்னேனன்னாளொருவார்த்தைகன்மம் நானுஞ் - சுகமுறவேமருவாதசென்மம்என்னசென்மம். அழை*

௨. செம்பொன்மலர்இன்பமுடன்சூடி உயர்- செம்பவளவாயால்இசை பாடிக் - கும்பமெனும்இருதனத்தைநாடி என்னைக் - கூடியவர்போனவிடந்தேடியுறவாடி. ... அழைத்து*

௩. தில்லைவனந்தனில்இருக்குமீசர் எங்கள் - சிவகாமவல்லியுடன் பிரியாதநேசர் - அல்லலறுத்தாண்டருள்பிரகாசர் இப்போ - தன்னைமேநீசொன்னால்வருவாரென்பிராணேசர். அழைத்(௭)

---

யதுக்குலகாம்போதிராகம்-ஆதிதாளம்.

(பல்லவி)

ஆசைதீரவேஎன்னை அணைந்தாலொண்ணாதோ

(அனுபல்லவி)

பூசைபுரியுந்தில்லை ஈசாசபைநடேசா. ஆசைதீர*

(சரணங்கள்)

௧. சந்திரனைக்கண்டு நீலம்அந்தரங்கமானது போல்-எந்தன்மீதில்பக்ஷம்வைத்துவந்தாலொண்ணாதோ- கந்தர்ப்பன்கைபுஷ்பபாணம் அந்திநேரமேவருமே-தந்திரமோசெய்வதெல்லாமந்திரசபைநடேசா.

௨. தேடியஅலவன்பேடு கூடிமருவாதிருந்தால் - நீடியஉலகிற்பேடு ஓடிநின்றுய்யுமோ - நாடியேவந்தஎன்மேல் மோடிசெய்யலாகுமோ - பாடியகின்னரர்போற்றஆடியசபைநடேசா. ஆசை*

௩. கருமேகங்கண்டுமயில்ஒருமைப்படுலீலை போல் - கரிசனமுடன் சேர்தல்பெருமையதல்லவோ - திருவுளமகிழ்ந்தென்னை மருவணை மீதினில் - சுருதிபுகழுந்தில்லைக்கனகசபைநடேசா.ஆ-(௮)

ஏசல்பதம்-சவுராஷ்டிரராகம்-ஏகதாளம்.

(பல்லவி)

௧. திருமுத்துப்பந்தலின்கீழ் - சுருதிப்பங்கயன்முதலோர் -| ருபக்க
ட்ட்தாழமேவருும்- இவரார்சொல்லன்னே -ஒருபத்தன்செ ந்தவத்
தைக்கருதிதிருத்தங்காட்ட-வருகிறபோம்பல-வாணர்காண்ட ன்னே.

௨. வடகயிலேதனில்மூன்று -சுடரும்உதித்ததுபோல்-இடபம் சைஏறி
வரும்-இவரார்சொல்லன்னே - கடல்கடையும்போதெழு| ந- விட
மமுதுசெயுநேசர் -நடனபராபரர்தில்லை - நாயகர்காண்ட ன்னே.

௩. சுரரொனுமூவாயிரவர் - திரளுமுனிவருஞ்சூழ - இரதமே சயேறி
வரும் - இவரார்சொல்லன்னே - சரமதராசனுமூன்று - ட முமெ
ரிபடமுனிந்த-பரமசிவகாமவல்லி-பங்கர்காண்மின்னே.

௪.கந்தருவரிசைபாட-மந்திரநான்மறைமுழங்க-இந்திரவிமா னத்தில்
வரும்-இவரார்சொல்லன்னே - அந்திவடிவினர்தொண்டர் - |ந்தியி
ல்வாழ்பவர்வால-சந்திரசேகரரானந்தத்- தாண்டவர்காண்மி ன்னே*

——*——

பதம்-சவுராஷ்டிரராகம்-அடதாளம்.

(பல்லவி)

நேசமேன்பூசலேன்ஆசையேன்பேசுநீர்
நேசமேன்பூசலேன்ஆசையேன்பேசுநீர்.

(அனுபல்லவி)

வாசஞ்சேர்தில்லைநடராசரோமுந்தவும் மை
மோசஞ்செய்தாளே அந்தரோசம்போதாதோ.நேச*

(சரணங்கள்)

௧. வாடியென்றழைத்துற - வாடிமுகவிச்சைகள்- பாடியவள் மேல்சி
ந்து -பாடிக்கொள்வீரல்லால்-போடியென்கிறபேச்சைப்-( பாடீர்
முன்னமும்பேய்க்கூத்- தாடியென்பதுமெய்க்க- ஆடியட ரதரோ.

௨. கொம்பனையாள்குதிரைக் - கொம்புரண்டானையொரு - ம்பஞ்
சேர்த்தீர்சேர்த்த-கம்புகன்றிடக்கண்டீர் - அம்பலவாணரோ நாம்ப
லேன்உமக்கிப்போ- என்போதுமேஒருத்தி-இன்பஞ்செய் ளோ

௩.பூண்டவாசையால்நேசம் - பூண்டபோதேனக்கு -வேண்ட தவளை
த்தீண்ட-வேண்டாமென்றேனே - ஆண்டாரோநீரொனைப்பெ ண்டா
ண்டால்தலைக்குமேலே-தாண்டவாநீரோ.தில்லைத்தாண்டவ யரோ.

——*——

பதம்-நாதநாமக்கிரியைராகம்-ஏகதாளம்

(பல்லவி.)

நானேவலியவந்தேனே கோபம்

(அனுபல்லவி.)

ஏனோ அம்பலத்துறைவானே தூய்யோனே. .... நானே*

(சரணங்கள்.)

௧. நினதுமனதில்வன்மங்கண்டு - நெஞ்சில் - நினையாதெல்லாம் நினைந்துநின்றுதுவண்டு - கனதனம்எனும்முலைரண்டு - நல்லகாணிக்கையென அலங்காரமாக்கொண்டு. .... நானே*

௨. தூறேதுமிலையெளன்மீது - வீணே - தூறுசொல்லிப்பிரிந்துவந்ததேசூது - வேறேஒருவரைத்தூது - போக - விடுத்தால்திராதென்றுவேண்டியிப்போது. .... நானே*

௩. தில்லைஅம்பலத்துள்ஆடி - நின்ற - சிவனே நீர்வாராதசேதியை நாடி - முல்லைஅமளிமேல்கூடிக் - கொண்ட - மோகத்தை யுன்னிமுயங்கவேதேடி. .... நானே(௰௧)

---

பதம்-நீலாம்புரிராகம்-சம்பைதாளம்.

(பல்லவி.)

கனவிலுமறப்பதில்லைமானே-நானும்

(அனுபல்லவி.)

கனகசபையிலாடுங்கடவுள்பதந்தானே, .. கனவி*

(சரணங்கள்)

௧. ஒன்றாகநின்றகாந்தரமும் - மூவுலகுக் - குயிர்க்குயிராகியேஉணர்த்தும்விசித்திரமுங் - குன்றாதஅருளளிக்குந்திரமும் - என்னைக்கூடிவிளையாடியஉபாயதந்திரமும். ... கனவி*

௨. இன்பவெள்ளத்தழுத்தும்இங்கிதமும் - கிருபை - எங்கெங்குந்தாராயிருந்திலகுஞ்சதமும் - அம்பரத்தில்ஆடியபொற்பதமும் - புஷ்ப - அணைமீதில்எனை அணைந்த அனுபோகவிதமும். கனவி*

௩. பரமகல்யாணசர்வேசம் - எங்கள் - பார்ப்பதியெனுஞ்சிவகாமிபிராணேசம் - கருணைசந்திரசேகரவிலாசம் - நானும் - கனகசபையில்அனவரதமும்நடேசம் .... கனவி(௰௨)

---

பதம்-எதுக்குலகாம்போதிராகம்-ஆதிதாளம்.

(பல்லவி)

தனித்திருக்கப்போகாதுமானே-தில்லை

(அனுபல்லவி)

வனத்துநடராசர்தமைமருவாமல்நானே. தனித்*

(சரணங்கள்)

௧. காமன்பெருங்கழைவளைத்தெய்ய - பூர்ண - கலைநிறைந்தமாமதியுந்

தழல்மாரிபெய்ய - சாமமெல்லாங்குயிற்கூவிலையை - என் - தலை யில்எழுத்தோவிதென்றெண்ணிமனம்நையத். .. த(த்*
உ. இரவோர்யுகமாகுதெங்கேசெல்வேன் - இனி என்தரத்துப்பெ(கட்
கிதையேதென்றுசொல்வேன் - காவில்எய்யுமதனை யென்று(வல்
வேன் - வீறு - காதல்வெள்ளம்நீந்தஎன்றுகலந்தணைந்துபுல்(வன்
ரு. திங்கள்கங்கையரவணியும்வேணிப் - புலியூர்ச் - சிவகாமவல்(பி இ
டப்பாகமாக்காணி - செங்கமலப்பதத்தில் மனம்ஊணி - (றுந்
தேன்கமழும்பூங்கொன்றைத்தொடாதனைக்கேணி, தனி(யரு)

---

பதம் - கல்யாணிராகம் - அடதாளசாப்பு

(பல்லவி)

சபையில்வந்தெதிர்நில்லடி - அவனைக்கிட்டித் - தழுவவுன்தரமல்(டி.

(அனுபல்லவி)

உபசரிப்பேன்சொல்லடி - அம்பலவாணர் - உளவறிந்தெனை (லடி
சுபதினம்என்றனுக்குச் சொலபமாய்வந்ததிப்போ - அபிநயம் (டித்
துக்கொண் டலைந்துநீதிரிகிருய். ... .... (டை*

(சரணங்கள்)

க. வழக்கம்ஒன்றறியாயோடி - நாலுபேர்சொன்ன - வார்த்தை(ங்கு
றியாயோடி - யிழுக்குக்குச்சிறியாயோடி - தினவெடுத்தால் - (டம்
பார்த்துச்சொறியாயோடி - உழக்கில்கிழக்குமேற்கென் - றுன் (டாக்
குகிருய்தேடி - மழைக்கொதுங்கிமனைக்கு - வழக்கிடுகிருய்வா (,ச*
உ. தெருவில்பெண்களைக்கூட்டுருய் - ஒளித்திருந்து - திருடக்க(ளைக்
கோல்தீட்டுருய் - கருதித்திருகல்மூட்டுருய் - விரித்துனது - க(டைத்
தொண்டையைக்காட்டுருய் - பெருமைக்கொருசரிகைப்புல(வை
இரவல்வாங்கித் - தரமறியாதுடுத்தித் - தசக்குகின்றசித்திராங்கி (சபை
ரு. இடக்குத்தொழில்மறக்குமோ - அடியுனக்கு - இனிமேல்குண(ம்நிற
க்குமோ - எடுத்தஅடிசிறக்குமோ - உன்னிடத்தினில் - இன்பநட(ம்பிற
க்குமோ - மூடுக்காய்அம்பலத்தானை - மயங்குவேன்நாவெ(ன்று.
நிடுக்கிட்டெவருமெச்சத் - தென்பாய்ச்சொல்கிருய்நன்று. (யச)

---

பதம் - சவுராஷ்டிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி)

தெருவில்வாராஞே - எனைச்சற்றே - திரும்பிப்பாராஞே

(அனுபல்லவி)

உருவிலியொடு திரிபுரத்தையும் உடன்எரிசெய்த நடனராசன்; தெரு

(சரணங்கள்)

வாசல்முன்நில்லாரோ - எனக்கொரு - வாசகஞ்சொல்லாரோ-நே
சமாய்ப்புல்லேனோ - கழைவைத்த ராசனைவெல்லேனோ-தேசிக
ன்அம்பல-வாணன்நடம்புரி - தேவாதிதேவன் - சிதம்பரநாதன்

௨.போதுபோகுதில்லையே-எனக்கொருதூதுசொல்வாரில்லையே-ஈதறி
ந்தேனில்லையேஎன்மேல்குற்றம்.ஏதொன்றும்இல்லையே,வேதனு
மாலும் மூவாயிரருந்திரள் - விண்ணவருந்தொழ.ஆடியபாதன்

௩.மெய்யென்றிருந்தேனே - அவனிடங்கைகையறிந்தேனே - மையல்த
ணிந்தேனே - பசந்திடு - மெய்யுங்குளிர்ந்தேனே - வையகம்உய்யப்
பதஞ்சலிபோற்றிட - வாழுங்கனக - சபைநடராசன். தெரு(௰௫)

இப்பதத்தில் - பல்லவிபாடியவுடன் - அருகில்வாராரோ - என்
ஆசைஅறிந்துசேராரோ - என்றும் — சரணமுடிவுகளில் - என்னுதன்வி
னோதன் சங்கீதன் ஒய்யாரன் என்றும் பாடிக்கொள்ளுகிறார்கள்.

---

பதம் - குறிஞ்சிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

கனவுகண்டெழுந்திருந்தேன்மானே - தில்லை

(அனுபல்லவி.)

அனவரதநடராசர்க்கன்புசெய்யநானே. கனவு*

(சரணங்கள்.)

௧. தெருவினிற்பவனிவந்திடவும் கண்டு - தெரிசித்தளவில்என்றன் சிவ
ன்வாலைதப்படவும் - ஒருகிளியைத்தூதுபோகவிடவும் ஆசை -
உள்ளத்திலடங்காமல்ஓடிப்போய்த்தொடவும். .. கனவு*

௨.கண்டவுடன்அவர்மீதில்விழவும் வாசங் - கமழ்கொன்றைமாலைதனி
ல்காதலுற்றழவும் - புண்டரிகபாதத்தைத்தொழவும் கொங்கை
பூரிக்கஉடைதாழப்புறத்தார் இகழவும். ... கனவு*

௩. அங்கசன்சமர்செய்ததறவும் மெத்த - ஆருப்பேராசை அந்நேரம்
முந்துறவும் - செங்கமலஅணைமீதுறவும் திருத் - தில்லைத்தாண்
டவனைச்சேர்ந்தின்பம்பெறவும். .... கனவு(௰௬)

—※—

பதம் - சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

சொல்லவாராய் - சேதி - சொல்லவாராய்.

(அனுபல்லவி.)

சொல்லவாராய்சேதி .... ... ... சுந்தரமாயின்னே
தில்லைநடராசர்என்னைச் சேர்ந்தமாமையல்.....சொல்ல*

(சரணங்கள்)

௧. அடுத்தடுத்துவந்து அந்தரங்கம்பாராட்டித் - துடுக்காக மாடி
செய்தால்சாலவேதுமானே. .... செல்ல*

௨. ஆசையாகிறதென்ன அதிர்ஷ்டமுன்னிலைவேணும் - பேசவும் அறி
யாதபெண்பேதைநானடி. ..... .... செல்ல*

௩. இருவருமொருமித்து இருந்தசுகங்களெல்லாம் - ஒருவரறிவாரோ ஆரி
லுமவாகுதே. ... .... ... செல்ல*

௪. சம்புசிவகாமிபங்கர்சந்திரசேகரர் - செம்பொன் அம்பலவாணர்
சேர்ந்தணைந்தமையல். .... .. சொ (டீள)

——*——

பதம்-ஆனந்தபைரவிராகம்- ஆதிதாளம்.

(பல்லவி,)

மையல்மிகவுமிஞ்சுதேசாமிநீர் இப்போமருவாதிருந்தால்என்செய்வே

(அநுபல்லவி.) [ன்

வையகம்புகழ்தில்லைவனநாதரோஎன்சாமி-மருமலர்மெத்தை-மீதிலிருவருமா-யிருந்து-சருவிச்சருள்-கொடுத்து-மருவிமுத்து-முத்தநாட.

(சரணங்கள்.)

௧. வரிக்குயில்எழிசைகூவத் - தென்றலுந்தாவ - மன்மதன் மலர்க்
கணை - தூவ- உருக்குமதிதனிலே - உலைவாய்மெழுகதுபோல்-
உருகுதென்றன் - உளம்- பரவசமா - யுடலம்- வருகுது காம-
வெள்ளம்- பெருகுது - வரவர. .... .... மையல்*

திஸ்ரம்

௨. களபகஸ்தூரிகள் பூசத்-தேவரீருடன்-கலந்திங்கிதமொழிகள் பேச-
அளகமலர்க்ள்வீச - அணைதனிலேயிருந்து - அந்தரங்க மாதே-என்
தனுள-மறிந்து சிந்தைமகிழ்ந்து-நீர் - இந்தநாளில்சேரா மை-

௩. தில்லைமூதூரில்வாசரோ-மூவாயிரவர், தினந்தினந்தொழும் நேசரோ-
வலவிசிவகாமிமகிழுஞ்-சபேசரோ-மாதவர்பணியும்-பொற்பாத
ரோதமிழ்க்-கொரு.நீதரோ-என்பிராண-நாதரோ-வரவர, மையல்

பதம்-எதுக்குலகாம்போதிராகம்-அடதாளம்.

(பல்லவி.)

மனதினில்தயவானால்-தினந்தினம்இப்படி-வருமோவராதோ

(அநுபல்லவி.)

தனதுக்குக்குறைவுண்டோஎன்கிறீர்......தேவர்சித்தம்
எனதுபாக்கியம்தில்லைக்கனகசபேசரோ... ..மனதினில்*

(சரணங்கள்.)

௧. உருமத்துக்கமலம்போல்திருமுகம்புலர்வானேன்-ஒருமனதாயிருந்

தால்பெருமைச்சுவருவானேன் - அருமந்தமனதுதான் தெருவெங்
கும் உலவுதே - பெருமைக்குத்தகுவதுரிமையோசாமி. மன*
உ. எவர்மோகந்தன்னில்வீழ்ந்தவர்மயமாவாலும் - கவரியின்காற்றை
ப்போல் துவளவேண்டாமோ - அவரவர் இச்சைசவைத்தால் நவரசரு
சிபோல நவபலங்காணுமன் றோசிவகாமிபிராணேசனே. மன*
ரு, தயவாறல் அடிக்கடி சுயமாவரவேணும்பி ரியவார்த்தைபேசினால்
செயலாவதேது - அயலாகளனைத்துள்ளதியமமோதேவர்க்கு - மய
லார்க்குஞ்சரியேநன்னயசபைவாறு - .. மனதினில் (௰க)

---- * ----

பதம் - நீலாம்புரிராகம் - ஆதிதாளம்,

(பல்லவி)

நீனைத்துக்கொண்டால்சகிக்கப்போமோ - தனக்குத்தானே
நிகரில்லியசாமிசெய்விந்தையை.................................... *

(அநுபல்லவி)

அனைத்துலகுந்துதிக்கும் - அம்பலவாணர்என்றன்
அந்தரங்கம்அறிந்தேதந்தஇன்பசுகத்தை - நினைத்து*

(சரணங்கள்)

க, வெடித்தமல்லிகைமுல்லை - முடித்தென்குழலைநீவி - மடித்தசுருள்
தந்திதந்து - கடித்தசம்ப்ரமலீலை .... .. நினைத்து*
உ, முலையைநெருடிநெஞ்சை - உலைமெழுகாயுருக்கிக் - கலைநெகிழ்த்தி
யபிர்த - நிலைசோதித்தவிதத்தை .... நினைத்து*
ரு, முத்துமுலைமேல்கையை - வைத்துநகம்பதித்துச் - சித்திரமஞ்சத்
திருத்தி - முத்துமுத்தாடினதை ...... நினைத்து*
ச, நாமரூபம்ஒன்றில்லாச் - சோமசேகரர்சிவ - காமசுந்தரிமகிழ் - எ
மசபேசரின்பம்... .... ..... நினைத்து (உ௰)

---

பதம் - நீலாம்புரிராகம் - சம்பைதாளம்

(பல்லவி)

பிரிந்தாலும்மறக்கக்கூடுமில்லைபெண்ணே - நடனம்

(அநுபல்லவி)

புரிந்தார் அம்பலவாணர் பூவணையின்கண்ணே. பிரிந்*

(சரணங்கள்)

க, சந்தனகஸ்தூரிவகைபூசி மெத்த - சரசஇங்கிதலீலைச்சுரதமொழி
பேசி - சந்ததம் அணைந்தால்வெகுவாசி இரவில் - தனித்திருக்கு
ம்பெண்சென்மந்தானென்னஞ்சி ...., பிரிந்*

உ, மூலமீதில் அமுர்தவைத்துநகத்தைக்-கொஞ்சி- முகத்தில்[illegible] கம்வை த்துக்குறிபமுத்தி அதரத்தை-கலைநெகிழ்த்திஉறவாடும்[illegible] ரத்தை. நாளும் - கலவியனுராகமனுபவித்திருந்தசுகத்தைப் .. பிரிந்*

௩, தென்கைலைபம்பதியில்வாசர் நாளுஞ்சிவகாமவல்லியுடன் [illegible]ரியாத நேசர் - என்கவலைதீர்க்குஞ்சரும்வசர் எங்கும் - இணை[illegible] ருவரில் லாதஈசர்நடராசர்... ... ... .... பி[illegible]ந்(உச)

பதம் - கல்யாணிராகம் - ஆதிதாளம்.

(பல்லவி)

எத்தனைத்தவஞ்செய்தாரோமானே - தில்லை - ஈசருனைப்புணரத்[illegible]ானே.

(அனுபல்லவி)

கர்த்தனெனத்தெரியப்...பொன்னம்பலத்துளாடும்
காரணபூரணஆரணமானவர்... எத்தனைத்தவம் *

(சரணங்கள்)

க. கொக்கிறகைச்சூடிவாருக்கிப்போது - கொழுந்தும் வே[illegible]ம்உண்டாச்சே - மேலும் - அக்கரவம்பூண்டமார்பர்தமக்குரத்[illegible] ஆரும்உண்டாச்சே - அந்தத் - தக்கன்என்னும்மாமன் தலை[illegible]யரிந்தார்க்குத் தாக்ஷிண்ணியம்உண்டாச்சே - சற்றும், வெட்க[illegible] இல்லா திருவாணிக்குப்பட்டாடை மெத்தவும்உண்டாச்சே, என்[illegible]ம்மா.

உ. ஒருத்தரும்இல்லாதபரதேசிக்கிப்போதுலகெல்லாம்உறவா[illegible]ச்சே - பெரும் உருத்திராக்ஷவடஞ்சூடுஞ்சடைக்கிப்போதுயர்[illegible]யான் துராவாச்சே - கையில் - தரித்தமான் கூய்ச்சலைக் கேட்ட[illegible]நக்கிப் போது சங்கீதம்உண்டாச்சே - புரம் - சிரித்தெரித்தவருக்[illegible]நச்செ கரக்ஷகனொனும்திருநாமம்உண்டாச்சே என்னம்மா. எத்த[illegible]னத் *

௩. யானைத்தோலும்புலித்தோலும்உடுத்தார்க்குஆடைத்திரள[illegible]ச்சே - உயர் - வானத்தினம்புலிசூடினார்க்கிப்போதுமணிமுடியு[illegible]ாடாச்சே - மது - பானத்தைமுன்னாள்சுமந்தார்க்குச்சைவப் ப[illegible]மென ப்போச்சே - பெண்கள் - மானத்தைப்போக்கினார்க்கு ராசா[illegible]னனு ம்ஒருமாப்பட்டம்உண்டாச்சே என்னம்மா... எத்தனைத்[illegible]வம் *

ச. மாட்டில்ஏறித்திரிவாருக்குவேண்டியவாகனம்உண்டாச்சே - தலை ஓட்டில்இரந்தேகுடிப்பாருக்கிப்போதுயர்பாத்திரம்ஆ[illegible]ச்சே - ஒரு - வீட்டிற்குடிஇருந்தேஅறியாருக்குவிண்தோய்மதிலா[illegible]ச்சே - சுடு - காட்டில்ஆடுவார்க்குத் தில்லையென்றேஒரு - காணியு[illegible]உண் டாச்சே என்னம்மா.................எத்தனைத்தவம் (உஉ)

